THE

# VIVEKA CHINTAMANI

## A Monthly Tamil Magazine, and High Thought Review,

Devoted to the Diffusion of Truth and Knowledge.

DEALING WITH THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS. ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.

**God is Love: Knowledge is Power: OM.**
**"Live and Learn." ஓதுவதொழியேல்."**
**SATYAMEVA JAYATI.**





**Vol. XIV.**

**May 1905-April 1906.**

# விவேக சிந்தாமணி

அறிவைப்பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

அறிவுடையாரெல்லாமுடையார்
அறிவிலாரேன்னுடையரேனுமிலர்—திருக்குறள்
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.

**14-ம் புத்தகம்.**

1905-ஆம் மேமீ முதல் 1906-ஆம் ஏப்ரல்மீ வரை.

PUBLISHED BY

The Secretary, Diffusion of Knowledge Agency,

Anandashrama, Triplicane, Madras,

For SATYANANDA of the ANANDA MISSION,

**1905-1906.**







# TABLE OF CONTENTS.

## VOL XIV. (May 1905—April 1906.)

### No. 1. for MAY, 1905.



### 1905-௵ மே௴. 1-சஞ்சிகை.



### No. 2. for JUNE, 1905.



### 1905-௵ ஜூன்௴. 2-வது சஞ்சிகை.



### No. 3. for JULY, 1905.

# TABLE OF CONTENTS.

Page.

### 1905-ம் ௵ ஜூலை ௴. 3-வது சஞ்சிகை.



### No. 4. for AUGUST, 1905.



### 1905ம்-௵ ஆகஸ்டு ௴. 4-வது சஞ்சிகை.



### No. 5. for SEPTEMBER, 1905. Poojah Special.



### 1905-ம் ௵ செப்டம்பர் ௴. 5-வது சஞ்சிகை.

[iv]

# TABLE OF CONTENTS.

Page.

## No. 6. for OCTOBER, 1905.



## 1905-ம்ஸு அக்டோபர்மூ. 6-வது சஞ்சிகை.



## No. 7 for NOVEMBER, 1905.



## 1905-ம்ஸு நவம்பர்மூ. 7-வது சஞ்சிகை.



## No. 8. for DECEMBER, 1905.

# TABLE OF CONTENTS.

# TABLE OF CONTENTS. [vi]

Page.

1906-ம் ஹூ, பிப்ரவரி மூ. 10-வது சஞ்சிகை—ராஜதம்பதிகள் விஜய சஞ்சிகை.



## No. 11. for MARCH, 1906.



1906-ம் ஹூ, மார்ச்சு மூ. 11-வது சஞ்சிகை.



## No. 12. for APRIL, 1906.



1906-ம் ஹூ, ஏப்ரல் மூ. 12-வது சஞ்சிகை.

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 14.] 1905-ம்௵ மேமீ. [சஞ்சிகை 1.

# THE GOSPEL OF WORK

OR

# The Lesson King Janaka learnt from the Siddhas.

## Work without attachment, the secret of all true Progress.

"AND HEARTS MUST BLOOM THAT HEARTS MAY FRUIT."

"The first message of religion is the recognition of the divine in things that are above us; the second is the message and meaning of the things below us; and the third the message and meaning of the things around us." —*Goethe* in *Wilhelm Meister.*

"If the young faculty of reverence gets nothing to feed upon, it dies out, and sometimes has no resurrection."—*Marcus Dods.*

"The best teacher is he who has the head of a man with the heart of a child."—J. *L Hughes.*

Attitude indicates character; it also reacts upon character. "Flesh," says Browning, "helps the soul." Physical health tends to moral health; physical erectness helps moral erectness. The physical elements air and light and space, have always been associated with the highest inspiration.—*Gleanings from Western Authors.*

"The growth of character is a movement from within."

"What to *Thought* a veil must prove
"That an *Action* may improve;
"Thus by *Doing* you shall know
"What it is you have to do."

"The truth is *Known* to thee to-day—
It will be *Felt* to-morrow."

"What is Thought to Life?
As air to a tree,
Which, through summer and through winter
Works invisibly;
Building up the trunks and branches
With solidity."

"To him who in the love of Nature, holds
Communion with her various forms, she speaks
A various language."

"We must sometimes set ourselves free (from books), and become Nature's pupils."

i And Nature, the old Nurse, took
The child upon her knee,
Saying, "Here is a story book
"Thy Father hath written for thee."

ii "Come wander with me", she said,
"Into regions yet untrod,
"And read what is still unread
"In the manuscripts of God."

iii And he wandered away and away
With Nature the dear old Nurse,
Who sang to him night and day
The rhymes of the Universe.—*Longfellow.*

"We have never known how to consolidate our conquests, whether in the region of spirit or matter. Instead of being encouraged by triumphs to fresh triumphs, we have only thought of sitting on the doorstep and drinking the cup of enjoyment to the dregs. Action has been overwhelmed by its own reaction."—*I. S. Reformer.*

"Silence My child! Silence! Be silent
And let Me do My work in you that
You may be fully established in
What you have made your own."—*The Inner Voice.*

"There are few tests of a man's spiritual condition more searching and decisive than the temper with which he bears unmerited insult and railing speech. I do not refer to mere self-command, to the self-respect which forbids an answer in kind, and imposes an external calmness of manner on a swelling indignation within ....... The question is not one of self-mastery under, but of superiority to, insult, which feels no anger or resentment at insolence or contempt; and this not from an abject or craven spirit but from living in a plane of feeling up to which personal insult does not reach. We are only concerned with that serenity of spirit which is not touched or wounded by opprobrious speech; and all will admit it is a very rare gift."—*Cotter Morrison.*

"அம்மா உமக்கு என்னமாவது விசேஷம் தெரிந்தால் யாரிடத்திலும் சொல்லவேண்டாம். நீங்களே அனுபவிப்பது......நீங்கள் சமாதியில் அடிக்கடி......நிரம்ப சந்தோஷம்...அம்மா உங்கள்வேலை என்க்கு நிரம்பப் பிடித்திருக்கிறதம்மா. எதாவது ஒருபிடிவாத மிருந்தால்தான் ஒருவேலை முடியுமம்மா... ஹடமிருக்க வேண்டுமம்மா......"*—சாந்தமாதேவி.

The Goal Reached—Rapture of Life merged in the Soul.

"வேண்டேன்புகழ், வேண்டேன்செல்வம், வேண்டேன்மண்ணும்விண்ணும்,
வேண்டேன்பிறப்பிறப்புச், சிவம்வேண்டார்தமைநாளும்
தீண்டேன், சென்றுசேர்ந்தேன், மன்னுதிருப்பெருந்துறை இறைதாள்
பூண்டேன்; புறம்போகேன், இனிப்புறம்போகலொட்டேனே!"—திருவாசகம்.

# நிஷ்காமகர்மம்.

## சனகராஜனும் சித்தர்களும்.

பூர்வத்தில் இப்பரதகண்டத்தை யாண்டுவந்த அரசர்களில் சனகமஹாராஜன் ஞானானுபவம் பூர்ணமாயுண்டாகி இராஜ்யபாரமும் செய்துவந்ததனால் அவனைப்போல் இகபரமிரண்டும் ஒன்றாக ஏகரஸமாய்ப்பிரமபாவனை செய்து அது சகஜமாக அந்த அனுபவத்திலிருந்து த்வந்தமின்றி வருந்தொழில்களை விருப்பு வெறுப்பின்றி நிஷ்காம்யகர்மரீதியாகச் செய்து வருவதே மேலான நிலையாமென்பது எல்லாரும் ஒப்புக்கொள்ளத் தக்கது. அந்த சனகமகாராஜனுக்கு பூர்வ ஜன்மவாசனை மிகுதியால் பரிபக்குவமிருந்து தமது பூஞ்சோலையில் ஸித்தர்கணம் தங்களுக்குள் தம் ஆத்மானுபவத்தைச் சொல்லிப் பாடிக்கொண்டிருந்ததைக் கேட்டு, அரசன் தனியிடமடைந்து அந்த சித்தர்வாக்கின் அர்த்தத்தைப்பற்றிச் சிந்தித்துத் தீர விசாரஞ்செய்ய அவனுக்கு எளிதில் ஆத்மஞானம் உண்டாகி 'ஆகாசபலம்' போல் அனுபவம் கைகூடிற்று. இந்த ஜனகர் கதையை 'ஆகாசபலம்' போல் எளிதில் ஞானானுபவம் கைகூடிவருவதற்கு உதாரணமாக வசிஷ்டபகவான் ஸ்ரீராமருக்கு எடுத்துச்

* This genuine extract from a private letter is given as an instance of the '*Echo from without*' that confirms the teachings of the *Word* or *Voice within.*

சொல்கிறார். ஆத்மஞானம் பெறுவதற்கான ஸத்மார்க்கத்தில் சுளு, பளுவென் இரண்டு வழிகள் உண்டென்று சொல்கிறார். ஒன்று,—

"தேசிகன்சொற்பிழையா மலனுஷ்டிக் கிற்பையப்பையத் தியக்கநீங்கிப்
"பேசியசென் மத்தா தலடுத்த சிலபிறப்பினு லாதல்பேறும்."

ஆசிரியருபதேசவாக்கியங்கள் தவராமே லப்பியாசஞ் செய்துவந்தால் மெல்ல மெல்ல மயக்கம்விட்டு ஆசாரிய ரனுக்கிரகஞ்செய்த ஜன்மத்திலாவது அதற்கடுத்த சில ஜநநங்களிலாவது முத்தி சித்தியாம். இது பளுவானவழியாம். சுளுவான மற்றொருவழி,—

"மாசறுவிற்பத்திசிறிதுண்டாகு மனத்தாற் றன்மனனத்தாலே
"யேசறுமாகாசபலம் வீழ்வதுபோல் மெய்ஞ்ஞான மெளிதிலுண்டாம்."

ஆசிரியருபதேசிக்க அவ்வாக்கியத்திற் (களங்கமற்ற தன்மையால்) சுயவிற்பத்தியுண்டாய் மேன்மேலும் விசாரித்து மனனஞ்செய்து வருவதினால் ஆகாசத்திலே பழுத்த பழமானது தானே நழுவி விழுவதுபோல உண்மைஞான மெளிதிலுண்டாகும். இதிலுள்ள இரகசிய மென்னவெனில் மனம் பழுத்தால் அதுதானே நழுவி விழும். மனம் நழுவினால் மாயை விட்டுப்போம். மாயை விட்டால் ஞானம் சுயம்பிரகாசமாய் விளங்கும். ஆகையால் இந்த அனுபவம் குற்றங்குறையின்றி பூரணமாயும் சுபாவமாயும் விளங்கும். இதற்கு களங்க மற்ற மனதும் தீரவிசாரம்செய்யும் புத்தியும் வேண்டும். "ஆகாசபலம்போல்" தத்துவ ஞானம் சித்தித்ததற் குதாரணமான சனகர்கதை பின்வருமாறு:—

"உலகில் ஆபத்தொன்றுமிலோன், விதரணத்தோன், செல்வமிக்கோன், ஒளவியமில் விதேகநாடரசாள்வோன் சனகனெனு மரசர்கோமான்." இவன் "சற்குணத்தால் கடலனையான்." விஷ்ணுவைப்போல உலகத்தை ரக்ஷிப்பவன். வசந்தகாலத்தில் ஒருநாள் வாசனையுள்ள புஷ்பங்கள் நிறைந்த சிங்காரவனத்தில் சந்தோஷத்துடன் சென்று, தனக்குள்ள மந்திரிமுதலிய சேனைகள் வெளியில்நிற்கத், தனியனாய் ஏகாந்த சஞ்சாரஞ்செய்து வருகையில் சித்துக்குரித்தான மனமுடையவர்களாதலால் "சித்தர்கள்"—அதாவது நன்றாக மனம்பழுத்தவர்கள் என்று சொல்லப்பெற்ற "சிற்குறிய சித்தர்கணம் பாடுவபண் செவியிற் கேட்டான்." சித்தர்கள் கட்புலனுக்கு விஷயமாகாத ஆகாசவாசிகளானாலும் பரிபக்குவமடைந்தவர்கள் அகமுகப்பட்ட மனத்தினராயிருக்கையில் பார்க்கவும் கேட்கவும் தக்கவர்களிவர்கள். சனகருக்கு பரிபக்குவமிகுதியால் மஹான்களனுபவம் சிரவணவாயிற்று. அந்த சித்தர்கணம்பாடிய கீதங்களின் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பைச் சென்றமுறை "சித்தர் ஞானவழி" யென்னும் விஷயத்துக்கு முன்னுரை மேற்கோளாக வெடுத்தாண்டோம். இப்பொழுது அந்த சித்தர்கணம்பாடிய கீதங்களை சனகன் கேட்டபடி வசிஷ்டர் ஸ்ரீராமருக்குச் சொல்லியவாறு இங்கெடுத்துக் கூறுவோம்.

1 "வெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புலத்தின் மேவாதோர் விளம்புகீதம்
"நெறியார் மன்னவன்கேட்டபடி யுரைப்ப நெடியவனே நீவிற்கொள்வாய்."

1. வாசனைநிறைந்த மலையிலிருப்பவர்கள், நேத்திர விஷயத்திற் பொருந்தாத சித்தர்கணங்கள் தங்கள் அனுபவத்தைப் பேசாநின்ற கீதையை, நீதிகள் நிறைந்த சனகராஜன் கேட்டவண்ணமே யாஞ் சொல்ல ஸ்ரீராமா மனதிற் றரிப்பாய்—என்பது இதன்பொருள்.

—— என்று சொல்லி; சித்தர்கணங்களில் ஒருகுழாம் ருக்வேத மஹா வாக்கியார்த்த நிரூபணஞ்செய்து தமது அனுபவத்தைச் சொல்லிப் பாடினதைச் சொல்கிறார். அது இது:—

"அறிவானு மறிபொருளுங் கூடிய கூட்டுறவி லெழுமறிவானந்தம்,
"பிறியாத ஆன் மதத்துவத்தெழுந்த தாம் அதனைப் பேணல் செய்வாம்."

'அறிவான்'=ஞாதா என்றது ப்ரமஞானத்தையும், 'அறிபொருள்'=(திரிஸ்யம்) என்றது சகமாய் விளங்கும் பிரமத்தையும் குறிக்கும். இவ்விரண்டுங் கூடி நசித்தவிடத்தது கூடஸ்த பிரமமென்பார் 'கூட்டுறவி லெழுமறிவானந்த' மென்றும்; அறிவு ஆனந்தமின்றி விளங்காமையாலும் அவ்வறிவே ஆனந்தமும், ஆனந்தம் அறிவையின்றி ஆனந்தியாதபடியால் அவ்வானந்தமே யறிவுமாய்ப் பிரிவற்று விளங்கியதாமென்பதைக் குறிக்க "பிரியாத ஆத்ம தத்துவத் தெழுந்த தாமதனை" யென்றும் சொன்னார். இதன் கருத்து ப்ரஜ்ஞானம்பிரமம் என்னும் ருக்வேத மஹாவாக்கியத்தின் லக்ஷியார்த்த வுண்மையை உள்ளனுபவத்தால் உரைத்ததொன்றேயன்றி வேறல்ல. அறிவானும் அறிபொருளுங் கூடும் கூட்டத்திலுண்டாகின்ற ஞானசுகமானது பிரிவுபடாத ஆத்மஞானத்திலுண்டானதாம். அவ்வாத்மஞான சுகத்தைப் "பேணல் செய்வாம்"—ஏற்றிப் போற்றி விரும்புவாம் என்று ஒரு சித்தர் குழாம் தம் அனுபவத்தைச் சொல்லிப் பாடினார்கள். பிரக்ஞை ரூபமாயிருக்கப்பட்ட ஞானமாம் அறிவே பிரமம் எனில், அதுவுமற்றவிடத்திலுள்ள "நான்" என்பது யார்? என்கிற கேள்வி பிறக்கலாமாதலால் இப்படி யுதிக்கக்கூடிய சந்தேகத்தைப் போக்க யஜுர் வேத மகாவாக்கியமாம் "அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்பதின் லக்ஷியார்த்தத்தை அனுபவரீதியாக வெடுத்து விளக்குவான் இன்னொரு சித்தர்கணம் தம் அனுபவத்தைச் சொல்லி கீதம் பாடலானார்கள். அவர்கள் பாடியது இது:—

"காண்பானுங் காண்பனவுங் காட்சியும் வாதனையுடனே கழலவிட்டுச்
"சேண்பாவு காட்சிக்கு முதலொளியா மச்சொருபஞ் சிந்தைசெய்வாம்."

இதில் 'அஹம்' என்பார் 'காண்பான்' என்றும், 'பிரமம்' என்பார் 'காண்பன' என்றும், அஸ்மி யென்பார் காட்சியென்றும், இம்மூன்றின் அசுத்தமான சீவேஸ்வர பிரமத்தோடும், இவற்றின் சுத்தமான கூடஸ்தபிரம ஐக்கியத்தை நீக்கென்பார் "வாதனையுடனே கழலவிட்" டென்றும்; இவையாவுமாய் விளங்குவது ஸ்வயம்பிரகாசம் என்பார் 'முதலொளியா மச்சொரூபம்' என்றும் கூறினார். ஞாதா, ஞேயம், ஞானம் ஆகிய மூன்றும் வாசனையோடும் நீங்கச்செய்து 'சேண்பாவு காட்சிக்கு'—உயர்வான பார்வைக்கு முதற்பிரகாசமாகிய அவ்வாத்மஸ்வரூபத்தை தியானம்செய்வோமென்று வேறொரு சித்தர்கணம் தம் அனுபவத்தைச் சொல்லி கீதம் பாடினார்கள். இவர்கள் பாடி ஓயவும் மூன்றாவது சித்தர்கணம் ஒன்று 'தத்துவமஸி' யென்னும் ஸாமவேத மஹாவாக்கியார்த்த நிரூபணம் செய்வான் தமது அனுபவத்தைச் சொல்லிக் கீதம்பாடத் துவக்கினர். அவர்கள் பாடின கீதம்* இது:—

"எண்பாலாமுள்ள திலதெனு மிரண்டினிடை யெய்தி யிறவிலாதாய்
"மாண்பான் வொளிக்கெல்லா மொளியா யச்சொரூபத்தை மதித்தல் செய்வாம்."

இதில், தற்பதமென்பார் 'உள்ள'தென்றும், தோம்பதமென்பார் 'இல'தென்றும், அசிபதமென்பார் இரண்டினிடையெய்தியென்றும், இச்சீவேஸ்வரகூடஸ்த ப்ரமமென்கின்ற நான்கு சைதந்யமும் நீங்கின சுயஞ்சைதந்ய மென்பார் "ஒளிக்கெல்லா மொளியா யச்சொரூபம்" என்றுங் கூறினதாகக் கொள்ளல்வேண்டும்.

'எண்பாலாய்'—நிலையான குணமுடைய 'உள்ள திலதென்னும்'—சத் அசத்தென்னும் இரண்டின் நடுவான வியாபகத்தையடைந்து முடிவில்லாததாய் 'மாண்பான ஒளிக்கெல்லாம்' ஒளியா யச்சொரூபத்தை,—சிந்திப்போமென்று ஒரு சித்தர் குழாம்பாடினர்.

நான்காம் வேதமாம் அதர்வண வேத மஹாவாக்கியமாம் "அயமாத்மா ப்ரஹ்ம" என்பதின் அர்த்தநிரூபணஞ் செய்வான் ஒரு சித்தர்குழாம் இவ்வாறு பாடலுற்றார். அது இது:—

"அகமக மென்றனைத் துயிரினிடத்து மிருந்தனவரத முரைப்பதாகி
"நிகழொளியாமான் மதத்துவமான சொரூபத்தை நினைத்தல்செய்வாம்."

அயம் என்பார் 'அகமகமென்றனைத் துயிரினிடத்திருந்' தென்றும், ஆத்மா வென்பார் 'அனைத் துயி' ரென்றும், இவ்விரண்டாகியும் விளங்குகின்ற பிரமம் என்பார் 'நிகழொளியா மாத்மதத்துவமான சொரூப' மென்றும் கூறினர். அனைத்துயிரினிடத் திருந்தென்பதை ஈசுவரபதமாகக்கொள்க.

சகல ஆத்மாக்களிடத்து மிருந்து நான் நானென்று சதாகாலமுஞ் சொல்வதாய் ப்ரகாசமாக விளங்காநின்ற ஆத்மஞானமாகிய வஸ்துவை சிந்திப்போமென்று ஒருசித்தர் கணம் பாடினார்கள். உடனே, ஒரு சித்தர்கணம்,—

"நிகழிதய குகையுறையுந் தேவதையை விட்டயலே தெய்வந்தேடல்
"மிகவரிய கவத்துவத்தை யெறிந்து சிறுமணிதேடும் வேட்கைபோலாம்."

என்றுபாடி, ஹிருதயாகாசத்தில் தானாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கிற தெய்வத்தைவிட்டு தனக்கு வேறான இடங்களில் வேறான தெய்வந்தேடல் கையிலிருக்கும் மிகவு மருமையான (விஷ்ணுவின் மார்பில்விளங்கும்) கௌஸ்துபமணியை விட்டெறிந்துவிட்டு சங்குமணி தேடுகின்ற ஆசையை யொத்திருக்கு மென்பதை விளக்கினர்.

ஆசையறுத்தவர்களுக் கன்றி மற்றவர்களுக் கிவ்வனுபவம் சித்தியாதென்று அவர்கள்பாடிய பாட்டு இது:—

"மாளாத காதலெனும் வர்ச்சநாபிக் கொடியின் வனத்தைச்சுட்டு
"நீளாசையனைத்து மறுத்தவர்க்கன்றோ விப்பயன்றானேரா நிற்கும்."

முடிவில்லாத ஆசையென்கின்ற விஷக்கொடியின் காட்டையெரித்து வாசனைமிகுந்த இச்சைகளனைத்தையுங் கெடுத்தவர்க்கல்லவா இவ்வாத்மலாபமானது சித்திக்கும் என்பது இதன்பொருள். புலன்களுக்கு விஷயமாம்பொருள்களனைத்திலும் முன்னும்பின்னு மின்பமில்லாமலிருக்கின்ற குற்றத்தைப் பார்த்திருந்தும் (அதைவிட்டு அந்தர்முகப்பட்டுத்) திரும்பாத (பஹிர்முக) பாவனையினால் அவ்விஷயங்களில் பந்தப்படுபவர்கள் கழுதையேயன்றி வேறொன்று மல்லவென்று இதைத்தொடர்ந்து பின்னுமவர் பாடலுற்ற அமுதகீதம் இது:—

"கோளான பொருளனைத்தின் முன்பொடு பின்பினிமையிலாக் குற்றங்கண்டு
"மீளாத பாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேறென்றன்றால்."

ஆகையால் மனது விஷயசுகத்தை நீக்கி பிரம்மசுகத்தை யடையவேண்டு மென்றும் இதுவே முத்தியென்றும் சித்தர்குழாங் கூடிப்பாடிக் குதூஹலப்பட் டமர்ந்தார்கள். அதற்குபாய மென்னவெனில்,—

"எழுந்தெழுந்து சிறுகின்ற இந்திரியப் பாம்புகளை யிதயந்தன்னில்
"அழுந்து விவேகத்தடியால் வச்சிரங்கொண் டிந்திரன் வெற்படர்வதென்ன,
"விழுந்திட மோதுறவேண்டுஞ் சாந்தியினாற் சமமேவியிடர் தீர்நெஞ்ச
"முழுந்துசுக வடிவாந்தற் பதநிலையைப் பெறுமிதுவே முத்தியென்ன."

எழும்பி யெழும்பிச் சீறுநின்ற இந்திரியமென்னும் ஸர்ப்பங்களை, தேவேந்திரன் வச்சிராயுதத்தைக் கொண்டு மலைகளைப் புடைப்பதுபோல, உறுதியான விவேகமென்னுந் தண்டினால் இதயந்தன்னில் (மனதினில்) விழுந்திட மோதுறவேண்டும்—(கெடும்படியாக அடிக்கவேண்டும்). உபசாந்தத்தினால் சமபாவத்தையடைந்து துன்பமில்லாத மனமானது முழுதுஞ் சுகவடிவாம் 'தற்பத நிலையைப்பெறும்'—தனது ஆத்மஸ்வரூப ஸ்திதியைப்பெறும். இதுவே மோக்ஷமென்று பலசித்தர் சொன்னார்கள். இப்படி சித்தர்கணம் தங்கள் அனுபவத்தைச்சொல்லிக் கீதம்பாடிக் களித்ததைக்கேட்டு சனகராசன் கலக்கமுற்று அரண்மனை சேர்ந்து மந்திரி பரிவாரங்களை யெல்லாம் விடைகொடுத் தனுப்பிவிட்டு இவ்வனுபவம் தனக்கு உண்மையில் விளங்கும்பொருட்டு ஆத்ம அநாத்மவிசாரஞ் செய்யத் தொடங்கினன்.

"தெளிவுடைய சித்தர்கணந் திகழ்வுறப்பாடிய கீதந்தெளியக்கேட்டுக்
"களிதருவெஞ்சினக்கருட னொலிகேட்ட பாம்பென்னக் கலங்கிமன்னன்
"குளிர்பொழிலின் றகமடைந்தான் அனைவரையும் விடைகொடுத்துக் கோயில்புக்கான்
"தளிர்சுதை செய் மேனிலத்தில் ஒருவனே யிருந்து தனிநாடலுற்றான்."

இப்படி குளிர்ந்த சுண்ணச்சாந்தினாற் செய்த மேனுப்பரிகையில் தனியிருந்து தான்கேட்டவற்றின் அர்த்தத்தைச் சிந்தித்து அதிதீரனாய் ஆத்மவிசாரஞ்செய்யத் தொடங்கின சனகன், தான் இதுகாறும் லோகாசாரங்களில் பிணிபட்டு வீணேமயங்கினதைக்கண்டு அதிசயித்து வருந்தினன். ஆயுள் பயனின்றிக் கழிந்ததைக்கண்டு வெறுத்தான். இராச போகமும் கசந்துபோக அதைத்தூஷிக்கலானன். பிரமன் முதலியோருடைய பெருஞ் செல்வமோகமும் அற்பமேயென்று கண்டு அதையும் வெறுத்தான். இப்படியே காலதூஷணம், தனதூஷணம் முதலானவைகளால் சகத்தை சத்திலதென்று கண்டுநீக்கி 'புறப்பொருள்' விசாரணைசெய்து அவற்றைநீக்கத் துணிந்தவிடத்து அவைக்கு ஆதாரமான தன்தேகத்தை விசாரிக்கப்புகுந்து அதன் பருவங்களைத் தூஷித்தான்.

"பாலகனாயஞ் ஞானத்தழுந்துவன் றற்காளையாய்ப் பாவைமாராற்
"சாலவருந்துவன் விருத்தன்றானாகிக் குடும்பத்தாற் றளர்ந்துசாவன்
"மேலவிவ் வெக்காலத் தென்செய்வான் மாயக் கூத்திருந்தவாறே!
"ஞாலமெலா மாடரங்காய்ப் பொறிமேளமாய் மனப்பேய் நடிக்குமன்றே."

"உள்ளத்தின் முடிமேலே யில்லாமை வீற்றிருக்கு முலகிலென்றுந்
"தெள்ளூற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதுந் தீமைவாழும்
"எள்ளற்ற வின்பத்தின் றலைமேலே துன்பங்க ளிருக்குமென்றாற்
"கொள்ளத்தக் கனவான குற்றமிலாப் பொருளேது குறிப்புளேற்கே."

இப்படி அறம்பொருள் இன்பமாயுள்ள யாவற்றையு மாராய்ந்து எல்லாம் சுகதுக்க ரூபமாயிருக்கக்கண்டு இதற்குக் காரணத்தை விசாரிக்க, மனமே சுகதுக்ககாரணமா மென்று கண்டார். அவர் தமது விவேகத்தால் விசாரித்தறிந்துணர்ந்த மனோதர்மமிது:—"இழிப்பரியச் விசித்திரமாஞ் சம்பத்தும் ஆபத்தாம் இகயம்காயில் (மனநு வருந்தினல்), ஓழிப்பரிய விசித்திரமா மாபத்துஞ் சம்பத்தா முள்ளம்வேண்டில்." சம்ஸாரவிருக்ஷம் கிளை, இலை, பூ, காய், பழத்தால் அளவில்லாமல் வளரும்படி செய்கின்ற மாயாகாரண மனதே அந்த விருக்ஷத்துக்கு வேராயிருக்கிற தென்றும், இம்மனதே சங்கற்பமென்று சொல்லப்படுமென்றும் தனக்குள் தீர்மானிக்கலானர். தீர்மானித்ததும் அம்மனதை சங்கற்ப நாசத்தாற் கெடுக்க நிச்சயித்தார்,—

"சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந்தானே யெய்தும்
"மங்குற்ற மனமிறக்கில் சநநமரணங்களென மரமுமாயும்
"இங்கிப்பாலென்னைத் திருடுங்கள்ளனைக் கண்டேன் கண்டேனிவன்பேர் நெஞ்சம்
"பொங்குற்ற நெஞ்சத்தால் நெடுநாள் நொந்தேன் இன்று பொன்றுவிப்பேன்."

சங்கற்ப நாசத்தினல் சுளுவாக மனோநாசம் வலியவரும். கேடுற்ற வேரானமனமான திறந்தால் பிறப்பிறப்பென்கிற விருக்ஷமும் நாசமாகும். இவ்விடத்தில் ஆத்மரத்தினமான என்னைத்திருடுகின்ற சோரனைப்பார்த்தேன் பார்த்தேன். இவன்பேர் மனமாம். வளரா நின்ற இம்மனதினல் வெகுகாலந் துன்பப்பட்டேன். அதை இப்போது கெடுப்பிப்பேன்—என்று நிச்சயித்து "இத்தனைநாள் மனமுத்தைத் துளைத்திலேன்," இன்று சிகிச்சையென்னுந் தமர்செய்து (துளைத்து) பொருந்திய அனுபவம் என்னும் (நூலினல்) சூத்திரத்தினல் அதை யழகாகக் கோவைசெய்து தரிப்பேன். சகலமுமுணர்ந்த சித்தர்களான தேசிகரால் "எல்லாந் தெளிந்தேன்." "சுத்த பரமானந்தந் தோற்றுவிக்கும் நல்லறிவாஞ் சோதி பெற்றேன்." மெதுவாக "இவன், நான், இங்கிவையென்னும் பொய் உள்ளொழித்தேன்" மீண்டும் நாடேன்."—என்று சுகபோதந்தானு யிருக்கின்ற சமாதியடைந்தார்.

"பேதிக்கு மனமென்னும்பெரும் பகையை முழுவலியாற் பிளந்து நின்றேன்
"வாதித்த துயரெல்லா மாற்றினேனுப சாந்தவாழ்வு பெற்றேன்
"சாதித்த விவேகமே யுன்னை வணங்கினேனென்று சனகர்கோமான்
"சேதித்த மனவலையெல்லா மொழித்துத்தானே சித்திரம்போனின்றான்."

இப்படி நெடுநேரம் மௌனமாய் சித்திரத்தைப்போல் சமாதியிலிருந்து சனகராஜன் மாய்ந்த மனதை "மீளா நல்லுபசாந்த நிறை நெஞ்சால்" (பூரணமனதினல்) "உலகியல்பைமேவிப் பார்த்தான்." அப்பொழுது அவன் முயற்சித்து ஆகவேண்டியது அடைய வேண்டியது ஒன்றுமில்லாமல் குற்றமுள்ள கற்பனையுமில்லாமல் எல்லாம் சுயபோதகமாக விருக்கக் கண்டான்.

"சுத்தமாய்ச் சொரூபமாமென்னுருவாய் வேறுதோன்றக் காணேன்"—இப்படிப்பட்ட யான் வராதவஸ்துக்களை விரும்பேன், "வந்தபொருளினைத் தள்ளேன்" "நித்தமாய்த் தன்னிலையில் நிற்குமென தறிவுருவின் நிலையாய் நிற்பேன்." சொன்னபடி யெது வருகின்றதோ அது வரக்கடவதென்று சொல்லி பிரமானந்தத்தில் மூழ்கி சனகராஜன் "ஒருமையானன்"—அத்துவிதநிலையுற்றான். இப்படியுண்டான அநுபவம் வளர்ந்து திடப்பட்ட சகஜாநுபவமாக நிலைபெற்று நிற்க, சூரியன் இச்சாவெத்தனங்களின்றி "நாளியற்றுமாறென்ன" "வந்து வந்து தானே தோன்றிப்பொழிலைப்பற்றின்றிச் செய்துமெனச் சனகனெண்ணி" நிமையே நியமமாக வருகின்ற எதிர்காலம் இறந்தகாலமிவ்விரண்டையும் "இமையளவுஞ் சிந்தை செய்யா"னை எனவுள்ள வர்த்தமானகாலத்தின் தொழிலில் ஒரு நிமிஷநேரத்தில் மந்தகாசத்தோடும் சஞ்சரிக்கத் தொடங்கினன். ஸர்வம் பிர்மமயம் என்கிற சகஜ நிஷ்டை கைவந்த சனகரது இந்த அநுபவம் சித்தர்களாற் சொல்லக்கேட்ட ஆத்மவிசாரணையினால் வந்ததேயன்றி வேறொன்றினால் வந்ததல்ல. ஆகையால் ஸ்ரீராமா, குற்றமற்றதாகியும் அழகாயுமிருக்கிற தனதாத்ம விசாரணையால் பரமபதத்தை யடையலாமேயன்றி ஆசாரியரில்லாதனர் செய்யுங் கிரியையால் ஆத்மஞான ஸ்வரூபத்தை யடையலாகுமோ வென்று, வசிஷ்ட பகவான் வற்புறுத்திக்கூறி நிஷ்காமகர்மம் செய்தால் ஆத்மலாபம் சித்திக்குமென்றும், அஞ்ஞானத்தை எப்படியும் கெடுக்கவேண்டுமென்றும் சொல்லுகிறார்.

"புறப்பேறுகளை *வேண்டியியற்றுகின்ற புண்ணியத்தைப் புவியிலுள்ளோர்
"சிறப்பான நல்லறிவு மிகவேண்டுமென்று முதற்செய்யிற்பேறும்†"

அச்சமான ஆபத்துக்கள் விளைகின்ற துன்பசமுத்திரமாய், "பிறப்பாம் நச்சுமரவித்தாகும் பேதைமையை (அஞ்ஞானத்தை) ப்பிளக்கல் வேண்டும்"—என்றுரைத்து அந்நிட்காமத்தாலுண்டாகிய விசாரணையின் பயனைக்கூறுகிறார்:—

"இலங்கிய சிந்தாமணி யாமிதயமெனுஞ் சரக்கறையிலிருக்கும் போதம்
"கலங்கலில்லா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம்போல் கணத்தில் நல்கும்
"துலங்கு விசாரம் படைத்துப்பேதைமைபோய் நல்லறிவு தோன்றினோரை
"யிலங்குகவசத்தோரை யம்புகள்போற் காமாதி விகற்பந்தாக்கா."

பிரகாசிக்கின்ற சிந்தாமணியாகிய இருதயமெனும் பெட்டியில் இருக்கின்ற ஞானமானது கலக்கமில்லாத விவேகியர்க்கு (ஞானிகளுக்கு) "கருதுபொருள்" கற்பகவிருக்ஷத்தைப்போல் க்ஷணத்தில் கொடுக்கும். ப்ரகாசிக்கின்ற ஆத்ம விசாரணையைப் பெற்று அவித்யையைக்கெட்டு "நல்லறிவு தோன்றினோரை"—சுகபோத முதயமானவர்களை, கவசந்தரித்தவர்கள்மேல் அம்பு பாயாதுபோல், இராகத்துவேஷாதிவிகற்பங்கள் தாக்கா. நிஷ்காமகர்மத்தாலுண்டான விசாரணையின் பயனை அகங்கார முதலிய நீங்கி ஞானமுதிக்குமென்பதைக் கடைசியாய் வற்புறுத்துகிறார்:—

* ஆத்மாவுக்குப் புறம்பான பதப்ராப்திகளை. † பேறும்—ஆத்மலாபமுண்டாம்.

"பரமாதித்தனை மறைத்துக் கறுத்தறிவற்றுக்களித்துப் படர்ந்து மீண்டு
"திரமான அகங்காரமுகில் விவேகக்காற்றால் சிதறிப்போகும்
"வரமானபதம் வேண்டிற் றன்மனத்தினாசை முதன் மாற்றவேண்டும்
"உரமான புவியை முதலுழுதன்றோ விளைபயன்களுறுகின்றாரே."

பரமாதித்தனும் ஞானசூரியனை மறைத்துக் களங்கமாய் அறிவின்றி மதர்த்து விரிந்து திரும்பவுரமாயிருக்கின்ற அகம்பாவமென்னு மேகமானது விவேகம் எனும் சண்டமாருதத்தினால் சின்னாபின்னமாகும். மேன்மையான இகபரஐக்கியமாம் சுகஸ்வரூபத்தை விரும்பினால் "தன்மனத்தினாசை" யை "முதல் மாற்றல் வேண்டும்." இப்படி ஆசையைமாற்றிச் செய்யும் நிஷ்காமகர்மத்தால் எல்லாந்தானே வரன்முறைவந்து சேரும். மனதை இப்படி நிஷ்காமமாகச் செய்துக் கொள்வதே உரமான நிலத்தை உழுது பண்படுத்துவதற் கொப்பாகும். உழுது பண்படுத்தின நிலம் விளைபயனெல்லாந்தானே தரும்.

ஆகையால் நிஷ்காமகர்மமே எல்லாவற்றிற்கும் முதலான ஆதாரமாம். நிஷ்காமகர்மத்தால் இருதயசுத்தியும், இருதயசுத்தியினால், விவேகமும், விவேகமென்னும் சண்டமாருதத்தால் அஞ்ஞானமென்னும் மேகப்படலம் சிதைவுறுதலும், அதனால் இருதயமென்னும் பெட்டியிலுள்ள சிந்தாமணி தானே சுயம்பிரகாசமாய் விளங்குவதும், அந்தப்ரகாசத்திலிருந்து தானே தானாய் விளங்குவதே ஜன்ம சாபல்யமும் சித்தி முத்தியெல்லாமுமாக இப்பயன்களை வரன்முறையே யளித்ததும் அளிக்கத்தக்கதுமான இவ்விவேகசிந்தாமணியை நிஷ்காமமனத்தோடு நாம் நடத்தி வருவதுபோல் இதை வாங்கி வாசிப்பவர்களும் நிஷ்காமமனத்தோடு இதை யாதரித்துப் பரவச்செய்து வந்தால் பெறலரும் பேறுகளெல்லாம் அவர்களுக்கு சித்திக்குமென்பதிற் சந்தேகமில்லை. அகத்திலுள்ள சிந்தாமணியைக் கரத்தில் காண்பதாகச் சொல்லும் வாக்குப் பொருந்துமாறு நாமும் சித்தர்கள் முத்தர்கள் முதலான பெரியோர்களை முன்னிட்டு அவர்கள் பேரருளைக்கொண்டு "விவேகசிந்தாமணி" யென்னும் பேர் இதற்குண்மையிற் பொருந்தும்படி நடத்திவருவோம். பதினான்காம் வருஷமுதலில் இப்பத்திரிகையை நடத்தக்கொண்ட சற்பாவம் இனிது நிறைவேறி முடியப் பரம்பொருள் எல்லாருளத்துமிருந்து அருள்புரிந்து ஆதரவு செய்யுமென்று திருவருளைச் சிந்திக்கின்றோம்.

ஓம்தத்ஸத்.

## THE TWO POLES OF EXISTENCE—BODY & SOUL, OR, MATTER & SPIRIT.

"THE POTENCY OF ALL THINGS IS YET TO BE FOUND IN MATTER."—*Tyndal.*

Burbank* of the spineless cactus and new fruits, who has been delving deep into the mysteries, tells us :—"The facts of plant life demand a kinetic theory of evolution, a slight change from Huxley's statement that, 'Matter is a magazine of force,' to that of matter being force alone. The time will come when the theory of 'ions' will be thrown aside and no line left between force and matter."—*Andrew Carnegie in his forth-coming 'Life of James Watts' (Madras Mail.)*

* Otherwise known as "the Wizard of Plant Life."

"Mind is neither material nor immaterial, but is a substance *sui generis*."—*Richard Harte.*

"I regard mind as living and embodied form—as that incomprehensible element whose nature it is to possess life and motion, as much so as it is the nature of other substances to possess inertia."—*Dr. Dod's Electrical Psychology.*

All material substances possess inertia, and are difficult to move in proportion to their density. Electricity (*Prana*) is the least dense of inert substances and the easiest to move. It sets all other material substances in motion. It is "the last link in the immeasurable chain"; but, before it can move substances more inert than it is, it has to be set in motion itself. Electricity is set in motion by "the finest, most sublime, and brilliant substance in being—a substance that possesses the attributes of inherent or self-motion and living power, and from which all other motion and power in the immeasurable universe are derived. This is the Infinite Mind and possesses embodied form. He is a living being. This Infinite Mind comes in contact with electricity (*Prana*), gives it motion, arms it with power......Mind or spirit is above all, and absolutely disposes of and controls all. Hence mind and its agent electricity (*Prana*) are both imponderable and co-eternal......As the Eternal One wraps clouds and darkness round about Him and holds back the face of His throne, so many do not believe in His existence, because He is unseen, while all visible objects of creation are so many realities. But the very position here assumed is an erroneous one. The very reverse of this is true. What is seen is not the reality, but is only the manifestation of the unseen."—*Dr. Dods.*

"The globe as a body, is moved by the positive and negative forces of electrical action. (Comp.—*Prana-Apana*) All the operations of nature and the earth and elements are carried on by the same power."—*Dr. Dods.*

"Mind or spirit is of itself embodied and living form. It is spiritual organism in absolute perfection and from mind itself all form and beauty emanate. The body of man is but an outshoot or emanation of his mind. If I may be indulged the expression, it is the ultimate of his mind."—*Dr. Dods.*

The Unutterable Exprience—He Whom Words Express Not.

"ஊசலாட்டு மிவ்வுடலுயிராயின விருவினை யறுத்தென்னை
ஓசையாலுணர்வார்க் குணர்வரி யவனுணர்வு தந்தொளியாக்கிப்
பாசமானவை பற்றறுத்துயர்ந்த தன்பரம்பெருங்கருணையால்
ஆசைதீர்த்தடியா ரடிக்கூட்டிய வற்புதமறியேனே."—திருவாசகம்.

## "உடல் - உயிர்"—"தேகம் - தேகி."

தன்குற்றம் ஓராது பிறர்குற்றங் கண்டொறுக்கும் பேதை அருள்பெற்றுத் தேறுவதெங்ஙனம் என்று ஒரு மௌனப்பரதேசி சொல்லக்கேட்டு, "தன்குற்றம்', என்னவென்று கேட்டேன். தான் அல்லாத தேகத்தை "நான்" என்று அபிமானித்துக் கொண்டாடுவதே பெருங்குற்றம். அக்குற்றத்தை ஆய்ந்தோர்ந்து நீக்கவல்லவனே தீரன். மற்றவரெல்லாம் மானிடப்பதரே—யென்றார். நான் தேகமல்லாவிடில் பின் என்னை? யென்றேன். இத்தேகவாசியாகிய தேகியே நீ. தேகம் அழிவுள்ளது. அதிலிருந்துகொண்டு அதையாட்டிவைக்கும் தேகி அழியாதது. தேகமென்பது இந்திரியக் கூட்டங்கள். இவை பிராணனிலும், பிராணன், மனதிலும், மனது புத்தியிலும், புத்தி சித்தத்திலும், சித்தம் அகங்காரத்திலும், இவையெல்லாம் அந்தக்கரணத்தோடுகூடிய உள்ளறிவிலும், உள்ளறிவு என்னும் (சிதாபாஸ) சீவன் பேரறிவு என்னும் (கூடஸ்த) சைதன்யத்திலும் கிரமக்கிரமமாக ஒடுங்கும். கடைசியில் எஞ்சிநின்ற கூடஸ்தன் பிரமத்தோடு அபேதமாய் ஒன்றுபட இப்படியுண்டான கூடஸ்தப்பிரம ஐக்கியத்துக்குச் சாக்ஷியாகவுள்ளதெதுவோ அதுவே நீ. இதை யெல்லாருக்குஞ் சொன்னால் விளங்காது. பக்குவமறிந்தே போதிக்க வேண்டுமென்றார்.

" இயற்கைகுணஞ் சோதித்து முன்னே,பின்னே யாவையுமாம் பிர்மநீ யென்னல்வேண்டும்
" வியப்புறவாசையி னுழல்வார்க் கிவ்வாறோதின் மீளாத நீநரகில்வீழ்த்ததாகுந்
" தியக்குறு போகத்தாசை தீர்ந்துபுந்தி தெளிந்தவனைப்போல் வார்க்கே திகழத்தோன்றும்
" மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக்கிட்டா வருந்தியுந் தன் பிறப்பறுக்கு மகனுமாங்கே."

முன்னமே சீடனது இயல்பான பக்குவங்களைப் பரிசோதித்து பின்பு ஸர்வமுமாய் விளங்கிய பிரமஸ்வரூபமே நீயென்று உபதேசிக்கவேண்டும். அதிசயிக்கும்படி ஆசையினாற் கட்டுண்டுழல்வாருக்கு இந்தப்ரகாரஞ் சொன்னால் மீளாத நரகாக்னியில் தள்ளிவிட்டதாகும். கலக்கத்தைத்தரும் போகவிச்சை தீர்ந்து அறிவு தெளிந்திருக்கின்றவனுக்குச் சமானமானவர்களுக்கே இது பிரகாசமாய் விளங்கும். மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டி வருத்தமுற்றாவது தனது பவத்தை நீக்கிக்கொள்ளப் பாடுபடும் சீஷனும் போகவிச்சைதீர்ந்து புத்தி தெளிந்தவனாக விருக்கவேண்டும்—என்பது இதன்பொருள். இது வசிஷ்ட பகவான் ஸ்ரீராமரைப்பார்த்துச் சொன்னது. இக்காலத்தில் சடம், சித்து (Matter, Mind) என்னும் இவைகளைப்பற்றி மேற்றிசை விஞ்ஞான பண்டிதர்கள் இன்னும் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள். பிரகிருதி சுபாவத்தை யுள்ளபடி யுள்நோக்கி யறிந்தவர்கள் மிஸ்டர் பர்பாங்க் என்பவரைப்போல சடம்-சத்தியென்பன இரண்டாகவின்றி, சித்தின் தடிப்பே ஜடமாயிருக்கிறதென்று கண்டுவருகிறார்கள். ஆனால் அவர்கள் பகிர்முகவாராய்ச்சிசெய்துவருகிறவர்களாதலால், இந்த வுண்மையை உள்ளபடி யுணர்ந்து உட்கொள்ள இன்னம் வெகு காலம்செல்லும்போலும்.

ஆதியிலுள்ளது ஆத்மா ஒன்றே. அதில் அற்புதமாயுண்டான சிற்சத்தி அதன் சலனரூபமேயன்றி வேறல்ல. இதையே சங்கற்பமென்றும், செய்தொழில் என்றும் சொல்வர். சர்வமுமாய் விளங்குகின்ற ஆத்மாவுக்கு 'செய்தொழில்'—'சங்கற்பம்' வந்தகாரணமென்னவென்று ஸ்ரீ இராமர் வசிஷ்டபகவானைக் கேட்க,—

" மெய்யான பொருளுடைய வாக்கியத்தின் மெய்ப்பொருளாய் முன்னொடுபின் விரோதமின்றிக்
" கையாரு நெல்லியெனக் காட்டவல்ல கட்டுரையே யாமிங்கு கழறிற்றெல்லாம்
" மெய்யான ஞானவிழி வெளியாய்ப் போதம் விரியவுதித்தா லென்சொலென்னும் வித்து
" கையார வலிதெளி தென்றுள்ளவாறு கலக்கமற நிலைநின்று காண்டியன்றே."

உண்மைப் பொருளையுணர்த்தும் மஹாவாக்கியத்தின் தத்துவார்த்தமாய், முன்னுக்குப் பின் விரோதமில்லாமல் கரதலா மலகத்தைப்போல ப்ரத்யக்ஷமாய்க் காட்டவல்ல நாம் இவ்விடத்திற் சொல்லியவனைத்தும் உறுதி வசனமேயாம். உண்மையான ஞானதிருஷ்டியானது ப்ரசன்னமாய் அறிவு வியாபகமாக உதயமானால் எனது வாக்கியம் என்னும் ஞானவித்தை அனுபவரீதியாக வலிதென்றும் எளிதென்றும் உள்ளவாறு கலக்கமின்றி நிச்சலனமான நிலையில் நின்றுபார்ப்பாய்.—சங்கற்ப முதித்தகாரணம் சங்கற்ப மொடுங்கினவிடத்தில் விளங்கும் என்று சொன்னார். இதற்கு மாயையை ஒழிக்கவேண்டு மென்றுசொல்லி அதை ஹிருதய சுத்தியினால் கெடுக்கலாமென்று கூறிப் பின்னு முபாயங்கூறுகிறார்:—

" பேதமுறு புந்தியே மாயையாகும் பெரிது வருந்தியுமிதனைப் போக்கல்வேண்டும்
" போதமுறு பேற்றினாலன்றி மாயைப்பெருநதியின் கரைதோன்றா பொருந்தத்தோன்றில்
" ஏதமறுமப்பதமே யிறவாவீடாமிம்மாயை பிறப்பிடமே தென்னவேண்டாஞ்
" சேதமுறக் கொல்வழியே தென்றுதேர்வாய் சிதைவுற்றா லிதனியல்பு தெரியுமன்றே."

பேத புத்தியே மாயை. மிகவும் வருந்தியாவது அதைக் கெடுக்கவேண்டும். ஞானமுள்ள ஆத்மலாபத்தாலன்றி அலைகள் மோதுகின்ற மாயையென்னும் பெருநதியின்கரை தோற்ருது. நன்ருகத் தோற்றினல் குற்றமற்ற அப்பதமே நசியாத நிருவாணமாம். இந்தமாயை யானது உண்டானதெவ்விடமென்று விசாரிக்கவேண்டாம். இது கெடும்படி இதைக்கெடுக் கின்ற மார்க்கமெதுவென்று ஸ்ரீராமா நீ விசாரித்தறிவாய். கெடுமானல் இம்மாயை யுண் டானவிதம் தெரியும்.—மாயையிலிருப்பவன் அம்மாயையைக் கெடுக்காவிடில் அம்மாயா தீதம் வெளிப்படாது—என்று சொன்னபடி. ஆகையால் நம்மில் படித்தவர்கள் என்று பேர்பெற்றவர்கள் ஆசைமோகங்களால் அறிவழிந்திருக்கையில் உண்மையான விசாரபுருஷர் கள் செய்த கிரந்தங்களை யரைகுறையாகப் படித்து தப்பர்த்தஞ் செய்துகொண்டு "ஆத்மா வுண்டா இல்லையா? உண்டானல் எங்கே காட்டு பார்க்கலா"மென்று விதண்டாவாதம் செய்வது வீண்வழக்கேயன்றி யதனல் பயனென்றுமில்லை.

இந்தமாயையானது எதிலுண்டானதென்றும், இதெப்படிப்பட்டதென்றும், ஈதிறந்தமார்க்க மெதுவென்றும் இவையெல்லாம் இது நசித்தாற்றேன்றும்.
"ஆதலினல் வன்துயரின் சாலையான அவித்தையெனும் நோய்க்கு மருந்தருந்தச் செய்தால் "தீதுபயில் பிறப்பென்னுங் கடலில்மூழ்காய்;"

[1] நெருங்கிய வாயுவானது தனக்காதாரரூபமான விண்ணில் உண்டாகிச் சஞ்சரிப் பதுபோல் "தன்பால் தோன்றும் சத்தியினல் ஆத்மதத்துவம்" விளங்கும்.

எங்கும் ஞானகாரமாக நிறைந்திருக்கும் "சிற்கடல் தன்னிடத்தே" அற்ப அசை வினல் சீவேஸ்வரசகமென்னும் கூட்டங்கள் ப்ரகாசிக்கும். "நுண்மைநோக்கால்"—சூக்ஷ்ம ஞானதிருஷ்டியினல், "ஐயமறத்தற்பதமொன்றகண்டமென்றே யமுழ்ந்துவாய் அக்கடலில்"— ஆத்மஸ்வரூபமொன்றே அகண்டமாயுள்ளதென்றுறுதிகொண்டு அந்த ஞானசமுத்திரத்தி லமுழ்ந்துவாய். சற்று அசைவுற்றதாகில் அந்த ஞானசிற்சத்தியானது க்ஷணநேரத்தில் ஸர்வ சத்தியினுலும் முழங்கத்தோன்றி, அறிவின்திரிபாகிய இடமும், காலமும், தொழில்களு மாகிய மூன்று பரிசுத்தமுள்ள சத்திகளை தனக்கு "துணையாச்சேர்க்கும்."

ஆத்மாவிலுள்ள ஞானசத்தி தனது சுபாவத்தையறிந்து முடிவில்லாத பரமபதத்தி லிருந்தும் "எனதுரு இவ்வளவென்று அறிவுற்றுப்போல் எண்ணுறும்." அளவற்று உருவ மில்லாத தனக்கு அளவுள்ளதாக இப்படி தனது ஸ்வரூபத்தை பாவனைசெய்யில், அந்த தொடர்பாவனையினல் அப்பொழுது "பெயர்கள் எல்லையாதியாம் பார்வைகள் வந்தடையா நிற்கும்." மிகுந்த விகற்பங்களைக் கொடுக்குமாகாரமாய் சித்ஸ்வரூபமானது இடம், காலம், தொழில் இவைகள்சேர்ந்து பந்தப்பட்டு நிற்கும்.

அகண்டமாய் அளவில்லாததாய் இருந்த பால்கடலுக்கொப்பான ஆத்மஸ்வரூபத் தில், சற்று அசைவுண்டானதால் க்ஷணநேரத்தி லுதித்த சித்சக்தி தனது சங்கற்ப விசேஷத் தால் இடம், காலம், தொழில் (கால, தேச, வர்த்தமானம்) என்னு முபாதிகளோடு கூடினதாக,—"ஈங்குரைசெய் சித்தினுடை யுருவந்தன்னை யாவரும் க்ஷேத்ரஜ்ஞனென்றியம்பா

1. Comp. "The wind it bloweth where it listeth; whence it cometh, whither it goeth nobody knows."

நிற்பர்.''—இதையே ''க்ஷேத்ரஜ்ஞன்'' என்றும் தேகி யென்றும் சொல்வர். காலதேச வர்த்தமானங்களோடு கூடியும், அகம்பாவ மின்மையால் ஈஸ்வரசக்தி வாய்ந்த இந்த க்ஷேத்ரஜ்ஞன், 'நான்' என்கிற வாதனையைச்செய்து அகம்பாவத்தை யடையும். அடக்கக்கூடாத இந்த அகங்காரமும் "பள்ளத்தில் நீர்தங்கும் தன்மையை மேற்கொண்டு" சித்தம் ஆகி; நிச்சயிக்குந் தொழிலை மேற்கொண்டு "மலினமுறு புந்தியாம்"—களங்கமுற்ற பேத புத்தியாகும். இந்த பேதபுத்தியே "வீங்கிய கற்பனை வடிவாய்"—மிகுந்த கற்பனாகாரமாய், "மனன நெஞ்சாம்." "விகற்பமிகு மனமாம்" இதுவே மெல்லவந்து இந்திரியங்களாம்.

"கரசரணமயவுடல் ஐம்பொறிகளென்பர்"—பஞ்ச விந்திரியங்களே கைகால்களோடுங் கூடிய உடல்=தேகம் என்று சொல்வார்கள். ஐயோ! தேகியான ஆத்மா இப்படியல்லவோ வருத்தமுறக் கலந்துகலந்து கட்டுண்டு கடைசியில் சங்கற்ப விகற்பமான துன்பந்தரும் ஸம்ஸாரவலையில் சிக்கலுற்றான். "சத்திமயமாம் மனம் இத்தன்மையாகி" இழிவுற அகம்பாவத்தைப் பொருந்தி கோசகாரப் புழுப்போல் தன்னிச்சையினால் தானே விலங்கிட்டுக்கொண்ட விதம் மிகவும் அற்புதம்.

"தானே சங்கற்பித்துத் தன்மாத்திரத்தாற் றனிவலையாம் உள்தொழில்கள் தன்னைக்கட்டக்
"கானேறு சிங்கம் விலங்குற்ற தென்னக்கவலையினான் மிகவுமனம் கரைந்துசோரும்."

தானே யுண்டாக்கியிருக்கின்ற பஞ்சதன்மாத்திரையினால் தனித்த வலையாகிய உள்விருத்திகளானவை தன்னைப் பந்தனஞ்செய்யக், காட்டிலிருக்கும் ஆண் சிங்கமானது காலில் தளைபூண்டதுபோல் துன்பத்தினால் மிகவும் மனம்கரைந்து வாடும். இந்தநிலையில் அதைப்பெரியோர்கள் நீங்காத மனமென்றும், புத்தியென்றும், ஞானமென்றும், தொழிலென்றும், அகங்காரமென்றும், வாதனாசரீரமென்றும், பிரகிருதியென்றும், மாயையென்றும், இழிவாகிய மலமென்றும், கன்மமென்றும், பந்தமென்றும், சித்தமென்றும், அவித்தையென்றும், ஆசையென்றும் சொல்வார்கள். சுத்த சைதன்யமான ஆத்ம ப்ரகாசத்தை விளங்கவிடாமல் மறைத்ததுபோல் தோற்றச்செய்யும் பாஞ்சபூதபௌதிகமானவை ஆத்மாவின் சங்கற்ப சக்தியினா லுண்டானவையேயன்றி அதற்கன்னியமா யிருந்துண்டானவையல்ல. ஆதலால் சங்கற்பத்தினாலுண்டான "மாயை" சங்கற்பம் ஒடுங்கின விடத்தில் விளங்குமென்று சொன்னார். இதை கிரமக்கிரமமாய் லயப்படுத்தி சங்கற்பநாசஞ்செய்து பார்த்தால், அப்பொழுது வெறுந்தோற்ற மாத்திரமான இந்த சீவேஸ்வர சகக்கூட்டங்களான யாவும் சுத்தசைதன்ய மாத்திரமாக விளங்குவது ஸ்வானுபவத்தில் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். இதைப் பாடுபட்டுழைத்து மனதை நிறுத்திப் பார்த்தாலன்றி மற்றப்படி விளங்காது. சங்கற்ப நாசஞ்செய்து பார்த்தால் அப்போ திருமூலதேவர் உபதேசித்தருளியபடி,—

"மரத்தைமறைத்தது மாமதயானை
மரத்தில்மறைந்தது மாமதயானை
பரத்தைமறைத்தது பார்முதற்பூதம்
பரத்தில்மறைந்தது பார்முதற்பூதம்."—என்பதின்

உண்மை உள்ளபடி உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

இவ்வாருக மனமானது "ஓரோரிடத்திலோரொன்ருக ஆசாபாசத்தினு லமைத்துச்சொன்ன ஒப்பரிய சகவிரிவா மிவற்றையெல்லாம் உட்கொள்ளும்;" தனது சங்கற்ப ரூபமான விஷயங்களில் அகம்பாவஞ் செய்வதினல் மனம் வருந்துவதன்றி வேறு பிரயோசனம் ஒன்றுமில்லை. வித்தில் மரம்போல் இந்த சகமெல்லாம் தன்னி லொடுக்கியுள்ள மனமானது "கவலைத்தீயின் வெப்பமிக்க கோபப்பாம்பெடுத்து நங்க" (விழுங்க), ஆசைக்கடலின் அலைகளால் மொத்துண்டு வருந்தி மெலிவுறும். ஆகையால் மனதை இரக்ஷிக்கவேண்டும்.

"பெருகியவித்துயர்களா லவசமாய்த் தன் பிதாமகனை மறந்துமிகப் பீடையுற்றுக்
"கருகிய விம்மனந்தன்னை யளற்றிலானைக் கரையேற்ற விடுவதுபோல் கரையிலேற்ருய்
"வெருவுசராமரணமெனும் விடத்தால்வெந்து மிகுநலங் தீங்கெனும் பகையர்ல் மெலியுநெஞ்சுக்
"கருள்புரியா நரர்மனித வடிவமான அரக்கரே யருள்வடிவமான வள்ளால்."

மிகுந்தவித்துன்பங்களினுல் தனது வசந்தப்பிதன் பிரமஸ்வரூபத்தை மறந்து மிகுந்த துன்பத்தையடைந்து கருகிய இந்தமனதை, சேற்றிலழுந்திய யானையைக் கரையிலேற்றி விடுவதைப்போல, மாயையினின்றும் கரையேற்றுவாய். பயங்கரமுள்ள மூப்புமரணமென்கின்ற விஷாக்னியால் தகிக்கப்பட்டு மிகுந்த நன்மை தீமைகளென்னும் சத்துருவினுல் தளருகின்ற மனதுக்கு கிருபைசெய்யாத மனிதர்கள், அருள்வடிவமாயிருக்கின்ற ஸ்ரீராமா, நரவடிவமாயிருக்கின்ற இராக்ஷஸர்களாவார்கள்—என்றபடி. ஆதாவது, மனதை விஷயத்தினின்றுந் திருப்பி (பகிர்முகமனதை அகமுகப்படுத்தி) அது உண்டான இடத்திற் கொண்டுபோய் அதைக் கரையேற்றவேண்டும்—பிரமத்திற் சேர்க்கவேண்டுமென்பதாம்.

மனம் அகமுகப்பட்டு அது உண்டான இடத்திற் போய்க்கரைந்தால் ஸர்வம் பிரமமயமாகவும், பகிர்முகப்பட்டு 'தொடர்சங்கற்பத்தில்' தொடர்ந்து சென்ருல் சிருஷ்டிக் கிரமத்தில் சீவேஸ்வர சகத்கூட்டங்களாகவும் விளங்கும். மனதைக் கரையேற்றி இரக்ஷிக்கவேண்டியதை வற்புறுத்தி மனம் வெளிமுகப்படுதலி லுண்டாகும் சிருஷ்டிக் கிரமத்தை வற்புறுத்துவான் பின்னும் கூறுகிருர்:—

"இவ்வகையே சிற்பாவ சீவபேத மியல்வடிவாம் பிரமத்தினிடையே நின்று
"வெளவிய பாவனையாலே வந்தகோடி வாராநின்றனகோடி வருவகோடி
"தெய்வவரையருவி நீர்த்துளிபோல் வந்கோர்சிலர் பிறவியொன்றிரண்டு மூன்று சேர்ந்தோர்
"நைவருசென்மங்கள் சிலர் நூற்றின் மிக்கோர் நாடியபவஞ்சிலர்கள் நண்ணிநின்ருேர்."

இந்தப்பிரகாரமே சித்விலாசமாயிருக்கின்ற சீவனுனவன் வேற்றுமையான ஆகாரமாய் பிரமத்தினிடததிலிருந்து, மேருமலையினின்று வருகின்ற அருவிநீர்த்துளிகள்போல, தாம்கொண்ட பாவனையால் வந்திருக்கின்றவைகள் அளவில்லனவாம். இனி வரப்பட்டவைகள் அளவில்லனவாம். வந்தவர்களில் சிலர் ஒன்றிரண்டு மூன்று சநநத்தையடைந்தார்கள். சிலர் துன்பத்தைக் கொடுக்கின்ற சநநங்கள் நூற்றினுமதிகப்பட்டார்கள். அளவிடுதற்கரிய பிறவிகளை சிலரடைந்தார்கள்—என்பது பொருள்.

தேவர் மக்கள் நரகர் முதலாக செடி கொடி மரம் மலை அருவி நீர், சூரியசந்திரர் ஆன அனைத்துச் சிருஷ்டியும் ஆத்மசங்கற்பத்தினுலே யுண்டானதென்று நிரூபித்துக்கொண்டு போகிருர்.

இப்படியாக தேகம் - தேகியென்றும், சடம்-சித் என்றும், சத் - அசத்தென்றும் த்வந்தமாச் சொல்வதெல்லாம் கற்பனுமாத்திரமேயன்றி, கற்பங்கடந்த ஆத்மானுபவத்தில் எங்கும் நிறைந்து பரிபூரணமாய் ஆதிமத்தியாந்தமற்று விளங்கும் அத்துவித வஸ்துவன்றி வேறொன்றில்லை. இந்த அனுபவத்துக்குத் தாழ்ந்ததா வுள்ளவெதுவும் படிக்கிரமமாக அவ ரவர் அனுபவித்த அனுபவத்தைச் சொல்வதன்றி முடிவல்லவாம். ஆகையால் வேதாந்த மும் சித்தாந்தமும் ஒன்றேயாம். துவைத விசிஷ்டாத்வைத மதங்களும் அவை போகுமள விற் குண்மையேயாம். அந்த எல்லைகடந்து செல்வோருக்கு அத்துவிதவிசாரம் அவசியம் பிறக்கும். ஆதலால் கேவலம் சிதாபாசர்களாயிருக்கும் சீவர்கள் மமதைகொண்டு வீண் மதம்பேசிக் காலத்தை வீணேகழிக்காது அவரவர் அறிவுக்கெட்டினமட்டும் உண்மையா யிருந்து உள்விசாரம் செய்துகொண்டு நிஷ்காம்யகர்மம் அனுஷ்டித்துவந்தால் அது வேயவர் களை உண்மையாயுள்ள ஸத்தியத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவைக்கும். ஆகையால் எவ ரும் வீண்மதம்பேசாமல் உண்மையாய் உள்விசாரம்செய்து ஊக்கமுடன் உண்மையில் நின்று உழைக்கக்கடவர்.

"மாசற்றகோள்கை மனத்திலடைந்தக்கால்
ஈசனைக்காட்டு முடம்பு."—என்னும்

ஔவைகுறள் எவ்வாற்றானு முண்மையேயன்றிப் பிசகல்ல. சுருதியுக்தி யனுபவ வாயிலாக இதை யாவரும் தெள்ளெனத் தெளிந்துய்யலாம்.

ஓம் தத்ஸத்.

---

# THE REVELATIONS OF THE RAMAYANA, OR, RAMA'S LIFE UNVEILED.

## (A Popular Ballad)

## ஞானராமாயணக்கப்பல்.

(From Sri, R. S. SUBBALAKSHMI AMMAL.)

"ஞானராமாயணமதனை நல்வான்மீகி நவின்றதுபோ
லானபிறரும் பன்னிருகாலமைத்தார் பலகாலழிதலினு
லீனமில்லா விதற்கிணையா யிரண்டாவது பாரதமதனை
மானவியாதன்செய்தது முன்மறையமற்றோர்களு முரைத்தார்."—ஞானவாசிஷ்டம்.

மோக்ஷமென்னும் அயோத்திதன்னில் வாழும்
பிரும்மமென்னும் தசரதர்க்கு ———
ஞானசக்தி, இச்சாசக்தி கிரியா
சக்தியென்ற மனைவியராம். ... ... ... ... ... ...
ஞானசக்தி கௌசலைக்கு ஆத்மா
ராமரென்னும் சுதன் பிறந்தார். ———
(அவ்) யக்தமென்னும் பாலியத்தால் ஆத்மா
ராமரவர் தன்னைமறந்தார். ... ... ... ... ... ...

முடுகு.

அக்கியானமயமான ஜீவன்தானுகி
தேகேந்திரியாதிகளுக்குக் கோனுகி
சிரவணமயமென்னும் வ சிஷ்டரையடைந்து
மனனமென்னும் விஸ்வா மித்ரரைத்தொடர்ந்து
வைராக்கியமென்னும் லக்ஷ் மணருடன்நடந்து
பஞ்சபாதகமென்னும் பர்வதங்கடந்து

ஆத்மாராமபிரான் 'என்னும் பரமேட்டி
விஜ்ஞானமென்கின்ற பாணத்தைத்தீட்டி
ஆவரணமென்கின்ற தாடகையைமாட்டி
அடியோடு மழிந்துபோ க அவளைமாட்டி
இச்சையென்னும் மாரீச னுக்குப் பயங்காட்டி
என்னெதிரில் வந்தால்சா வதுயென்று ஓட்டி
விபசாரமென்கின்ற பாறையைமிதித்து
ஆசாரமென்கின்ற அகலிகையைத்துதித்து
ஏகாந்தமென்கின்ற மிதுலையைச்சேர்ந்து
சாந்தமயமென்கின்ற ஜனகரைச்சார்ந்து
பொறுமையென்கின்ற கார்முகமொடித்து
ஆனந்தமென்கின்ற ஜானகி கைப்பிடித்து
மதமென்கின்ற பரசு ராமனையெதிர்த்து
என்றும்மதமெழா மல் கர்வமழித்து
மோக்ஷபதமென்னும் அ யோத்தியில் புகுந்து
ஜீவன்தானல்ல என்பதைநினைந்து
பிரும்மமென்னும் அந்த தசரதனுடன்கூட
கூடஸ்தமென்னும் அபி ஷேகத்தைநாட
கிரியைஎன்கின்ற கை கேயியினுடைய
சலனமென்கின்ற ஏவல்வந்தடைய
பிரும்மமென்கின்ற தசரதனைப்பிரிந்து
மோக்ஷமென்கின்ற அ யோத்தியைத்துறந்து
வைராக்கிய மென்கின்ற லக்ஷ்மணனுடனே
ஆனந்தமென்கின்ற வைதேகியுடனே
சித்தமென்னும் சரயு நதிதன்னைத்தாவி
புத்தியென்கின்ற கு கன்றனைமேவி
விக்ஷேபமென்னும் வ னத்தினுட்சென்று
தீபமென்னும் சித்திர கூடத்தில்நின்று
அகங்காரமென்னும் வி ராதனைக்கொன்று
மனமென்னும் காகா சுரனையும்வென்று
சங்கல்பமென்கின்ற கண்ணைக்கெடுத்து
நிருவிகல்பமென்னும் கண்ணைக்கொடுத்து
வீரமென்னும் அகஸ்திய முனிதன்னைக்கண்டு
தீரமென்னும் அஸ்தி ரம் பெற்றுக்கொண்டு
காமமென்னும் சூர்ப்ப நகியைத்தண்டித்து
ஆகாமிய கரதூஷ ணனைக்கண்டித்து
இச்சையென்னும் அரக்கன் மாரீசனாலே
ஆனந்தமென்னுஞ் சீதை யைப் பிரிந்ததாலே
இராஜஸமென்கின்ற இராவணனடுத்து
ஆனந்தமென்கின்ற சீதையையெடுத்து
இன்பமென்கின்ற வை தேகியையுருக்கும்
துன்பமென்கின்ற இ லங்கையிலிருக்கும்
அசுபவாசனையென்னும் ராக்கதர்மொய்க்க
எண்ணமென்னும் அசோ' வனத்தினில்வைக்க—

(இன்னும் வரும்)

## The Battle of Tsu-Shima—Great Japanese Victory.

## ருஷிய—ஜப்பானிய யுத்தம்.

### த்சுஷீமாவுக்கருகில் நடந்த சண்டை.

ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் சென்ற 16-மாதங்களாக நடந்துவரும் யுத்தம் ஒருவிதத்தில் முடிவுக்கு வரலாம் போலிருக்கிறது. ஜப்பானியர் போர்த்துவக்கத்திலேயே போர்ட் ஆர்தர் துறைமுகத்திலிருந்த ருஷியர் கப்பற்படையை எதிர்த்து அநேகம் கப்பல்களை யுடைத்தும் அழித்தும் அக்கப்பற்படை சின்னபின்னமாகச்செய்து விட்டார்கள். பிறகு லேயாங் சண்டையில் ருஷியர்களுடைய கரைச்சேனைகளையெதிர்த்து நன்றாக முறியடித்தார்கள். நன்றாக அரண்செய்து காக்கப்பட்ட போர்ட் ஆர்தர் கோட்டையையும் சாமர்த்தியமாய்ப் பிடித்துக்கொண்டார்கள். ருஷியர்களை வரவர மஞ்சூரியாவிலிருந்து பின்வாங்கச்செய்து முக்டன் என்னுமிடத்தில் நடந்த பெரிய சண்டையில் அவர்களை நன்றாக முறியடித் தோடச்செய்தார்கள். போர்ட் ஆர்தர் விழுந்து போகவும், ருஷியர்களுக்கு பால்டிக் கடலிலிருந்த கப்பற்படை புறப்பட்டு ஜப்பானியர்கள் கப்பற்படையை துவம்சம்செய்து விடுவதாக விருது கட்டிக்கொண்டு வந்தது. அதுமத்திய தரைக்கடல் வழியாய் வந்து 'ரெட்ஸீ' என்னும் செங்கடல், இந்திய மகாசமுத்திரம் இவைகளைத்தாண்டி, மலாக்கா ஜலசந்திவழியாய் பசிபிக் மகாசமுத்திரத்திற் பிரவேசித்து வடக்கேயுள்ள விளாடிவாஸ்டக் துறைமுகத்துக்குப் போகவுத்தேசித்து, மற்ற வழிகளெல்லாம் சமுத்திரத்தின் கீழ் சுரங்கங்கள் வைத்துத்தடுக்கப்பட்டிருந்ததால் கொரியாஜலசந்தியிற் பிரவேசித்து ஜப்பானுக்கும் மஞ்சூரியாவுக்கும் நடுவிலுள்ள கடல் வழியாக அதைத்தாண்டி வடக்கே போக யத்தனித்தது. கோரியா ஜலசந்தியினுள் பிரவேசித்து கொஞ்ச தூரம் போகவும் அங்கே ருஷியகப்பற்படை வருவதை யெதிர்பார்த்துக்கொண்டு தயாராயிருந்த ஜப்பான் கப்பற் படைத்தலைவராகிய அட்மிரல் டோகோ அவர்கள் மிகவும் சாமர்த்தியமாய் ருஷிய கப்பல்களைச் சூழ்ந்து கொண்டு இரண்டு நாள் சண்டையில் ருஷிய கப்பல்களையெல்லாம் உடைத்துத் தகர்த்தும் மூழ்கடித்தும் எதிரிகளைச் சூறையாடி அவர்கள் கப்பற் சைனியமே நிர்மூலமாக அழித்து விட்டார். இந்தச் சண்டையில் ருஷியதரப்பில் நாசமானவர்கள் 14,000 பேர்கள். சிறையானவர்கள் 5,000 பேர்கள். தப்பினவர்கள் 3,000 பேர்கள். ருஷியாது பெரியகப்பற் படையில், இரண்டு மூன்று தகர்பட்டும் தப்பியோடினவை போக மற்றவற்றை மூழ்கடித்தும் சிலவற்றைச் சிறைபிடித்தும் ருஷியர்களுக்கு கப்பற்சைனியபலம் இனி இல்லையென்று சொல்லும்படி அவர்கள் வலியைச் சிதறடித்து விட்டார்கள். பால்டிக் கப்பல் படைத்தலைவரும் காயம்பட்டு கைதியாகப்பிடிபட்டார். இந்த சண்டையினால் ஜப்பானியர் கப்பற் படையில் மகாவலுத்தவர்களென்றும், கடற்சண்டையில் இங்கிலாண்டு ஒன்றுக்கு மட்டுமே இரண்டாவதாகச் சொல்லலாமென்றும் அவ்வளவு கிதாப்புப்பெற்று விட்டார்கள். ருஷியர்கள் ஜப்பானியரை யெதிர்த்து இந்தப் போரில் இனிவெல்வார்களென்று நினைக்க இடமில்லை. ஆகையால் இருதரத்தாரும் சமாதானம் செய்து கொண்டால் நலமாயிருக்குமென்று அமெரிக்கா யூனைடெட் ஸ்டேட்ஸ் ப்ரெஸிடெண்டு மிஸ்டர் ரூஸ்வெல்ட் பெருமுயற்சிசெய்து வருகிறார். அவர் முயற்சி பலித்தால் நல்லதுதான். இந்தச்சண்டை மேமீ 27,28-உகளில் நடந்தது. உலகத்தில் பூர்வந்தொட்டு நடந்த முற்றும் தீர்ப்பான மஹாசண்டைகளில் இது 16-வதாகக் கணக்கிட்டுச் சொல்கிறார்கள். பேர்போன ட்ராபல்கர் கப்பல் யுத்தம் நடந்த 100-ம் ஆண்டில் அதற்கொப்பான இந்த மஹாயுத்தம் (கப்பற் சண்டை) நடந்திருக்கிறது. இந்த வெற்றிபெற்றதால் உலகத்திலுள்ள ஜனங்கள் எல்லாரும் ஜப்பானியரை மிகவும் மேலாகக் கொண்டாடுகிறார்கள். ஆனால் ஜப்பானியர் மட்டு என்ன வெற்றி பெற்றும் தலை திரும்பாமல், சாந்தமாகவும், தீரமாகவும், தம் நிலை குலையாமலும் மிகவும் பெருமிதமாக நடந்து கொண்டுவருகிறார்கள். இதற்குக்காரணம் என்னவென்றால் அவர்கள் தேகபலத்திலும் மனோ பலம்

உள்ளவர்கள். ஆதலால் ருஷியர்கள் தேசபலத்தில் மேலாயிருந்தும் மனப்பயிர்ச்சி யில்லாமையால், அவர்கள் பலம் உபயோகப்படாமல், ஜப்பானியர்கள் புத்தி, யுத்தி, சாமர்த்தியத்தோடு தம் மனதையடக்கிச் செய்துவரும் யுத்தம் எங்கும் அவர்களுக்கு வெற்றி தருவதாக விருக்கிறது. மனதைச் சிகிச்சையினால் அடக்கியாளக்கற்றவர்கள் உலகாளக் கேட்பானேன்.

"தானடங்க ஊரடங்கும்," என்பது பழமொழி யல்லவோ. ஜப்பானியர்களது புஷிடோ என்னும் மதக்கொள்கை நமது நிஷ்காமகர்மக் கொள்கைக் கொத்ததா யிருக்கிறது. நிஷ்காமகர்மம் எந்த மதத்தைச் சேர்ந்தது? எல்லா ஸத்யமதத்திலும் அது உள்ளதுதான். மனதை யடக்கவும் தனது பூரண சக்தியையும் சொரூபத்தையும் உள்ளபடி யுணர்ந்தனுபவிக்கவும் அது தவறுதவழி. அந்த வழியை யனுசரித்தால் இந்தியர்கள் முன்னுக்கு வரலாம். வீணாக வாசாவேதாந்தம் பேசிக்கொண்டு ஸ்வயகாரியத்தில் புலிகளாயும் ஸ்வாமி காரியத்தில் வழவழவென்று மிருந்துவந்தால் இவர்கள் உருப்படமாட்டார்கள். மேற்றிசையாரைப் பார்த்து காசாசை பிடித்து அதைச் சம்பாதிக்கிற வழியும் தெரியாமல் புலியைப் பார்த்து பூனை சூடிட்டுக்கொண்ட கதையாக அவர்கள் நடையுடைபாவனைகளையும் குறைகுற்றங்களையும் தாரதரமறியாமல் பின்பற்றி வருவதால் பிரயோஜனமில்லை. "குணமாய்ந்து குற்றமுமாய்ந்து மிகவாய்ந்து மிக்ககொளல்" என்பதை மேற்றிசையார் நாகரிகவழிகளை யாராய்ந்து அவர்களிடத்துள்ள நலந்தீதுகளில் தீமையை விலக்கி நன்மையை கிரகித்து தங்கள் சுபாவத்துக்கேற்க அவைகளை மாற்றி யாண்டுவந்தால் 50வருஷ காலத்தில் அதியற்புதமாக யாவரும் புகழும்படி அவர்கள் முன்னுக்கு வந்திருக்கிறார்கள். நம்மவர்கள் நிஷ்காமகர்ம தர்மத்தை மேற்கொண்டுழைத்தால்வெகு சீக்கிரத்தில் முன்னுக்குவருவார்கள். இல்லாவிட்டால் வரவரச் சீர்குலைந்து இப்பொழுதினு மதிகமாகச் சின்னபின்னப்பட்டுச் சிதறிப்போவார்கள். தன்முயற்சியே எல்லாச் செல்வமும் தரும். தேகம் நான் என்கிற மூடபாவனையை விட்டு ஸத்தியத்தைக் கடைப்பிடியாகப் பிடித்தாலொழிய நம்மவர்கள் உருப்பட வேறுவழியில்லை. "தேகோகம்" என்கிற பாவனையுள்ள எவர்களும் சாவுக்குத் துணிந்த தீரர்களாவது ஒருக்காலுமில்லை.

---

EXTRACT.

## Trafalgar and Tsu - Shima.

## திராபல்கார்—த்சு ஷீமா

## கப்பற் சண்டைகள்.

ருஷிய கப்பற்படையானது முறியடிக்கப்பட்டு ஏறக்குறைய முழுமையும் நாசமாக்கப்பட்டது. சற்று முன் கொரியா ஜலசந்தியில் நடந்த சண்டையானது 100 வருஷங்களுக்கு முன்னே நடந்த திராபல்கார் சண்டைக்கு ஒப்பென்று அநேகர் சொல்லுகிறார்கள். இவ்விரு பெரிய கப்பற்சண்டைகளுக்கும் உள்ள ஒப்புமை பிரசித்தமாக இருக்கிறது. வித்தியாசமும் மிக அறிவைப் புகட்டுகிறதாகவிருக்கிறது.

ஆசியாகண்டம் முழுமையையுஞ் சன்னஞ்சன்னமாய்க் கவர்ந்து விழுங்கிப்போட மனங்கொண்டதாகக் காணப்பட்ட ஒரு பெரிய தேசத்தோடு எதிர்த்து யுத்தஞ்செய்கிறவர்கள் ஒரு தீவு ஜாதியார். ஜப்பான் தேசத்தவர் ருஷியருடன் எதிர்த்து அவர்களுடைய சத்துவத்தை முழுமையும் அழியும்படி செய்தார்கள்.

100 வருஷங்களுக்கு முன்னே நெப்போலியன் என்பவன் இம்மாதிரியாகவே ஐரோப்பா முழுமையும் தின்றுவிடவேண்டுமென்று எண்ணங்கொண்டான். ஆனால் இங்கிலாந்தில் வசித்த ஒரு தீவு ஜாதி அவனை எதிர்த்துநின்றது. ஆகையால் அவன் இங்கிலாந்தின்மீது படையெடுத்து அதை நசுக்கத்

தீர்மானித்தான். அப்படிச் செய்வதற்கு அவனுக்கு ஒன்று அவசியமாயிருந்தது. அந்த ஒரு வஸ்துவை அவன் பெறாதபடி தடுக்கவே இங்கிலாந்தின் எல்லா பிரயத்தனங்களும் ஒருமித்து செய்யப்பட்டிருந்தன. இங்கிலாந்தின் மீது படையெடுக்க விரும்பினால் அவன் கொஞ்சநாளைக்காவது இங்கிலாந்தையும் பிரான்சையும் வேறுபடுத்துகிற ஜலசந்தியாகிய (English Channel) இங்கிலீஷ் கால்வாய்மீது ஸ்வாதந்திரியனாகி நிற்கவேண்டும். பிரான்சுக்கரையோரத்தில் நெப்போலியன் தன்னிடத்திலிருந்த பொறுக்கியெடுத்த முதற்றரமான 1,30,000 அடங்கிய சேனையைச் சேர்த்துக் கூட்டிக்கொண்டான். அவைகளை அக்கரைக்குக் கொண்டுபோக ஆயிரம் படகுகளைச் செய்துகொண்டான். ஆயினும் இங்கிலீஷ் கப்பற்படை இரண்டு வருஷங்களுக்கு மேலாக அதைக் கவனித்துப் பார்த்துவந்து, கடைசியாக மகிமைபொருந்திய திராபல்கார் சண்டையில் ஒன்று சேர்ந்த பிரான்சிய ஸ்பானிய கப்பற்படைகளை முற்றிலும் முறியடித்து படையெடுப்பு என்னும் பயத்தை எல்லாம் ஒழித்துவிட்டது. பிரான்சுக்கு 40 கப்பல்களுக்கு மேற்பட்ட கப்பற்படை இருந்தது. ஆனால் அது சிதறி வெவ்வேறாய் தூரதூரமான 4 துறைமுகங்களில் பாதுகாக்கப்பட்டிருந்தன. இத்துறைமுகங்களின் வெளியே நின்று, விடாது ஜாக்கிரதையோடும் புயல்காற்றடிக்கும்போது இப்படிச் சிதறிய கப்பற்படை ஒன்று சேராதபடி தடுப்பதே பிரிடிஷ் மாலுமிகளுக்கு பெரிய வேலையாயிருந்தது. அவ்வேலையை அவர்கள் வெகு மேன்மையாய்ச் செய்தார்கள். பிரதி மாதமும், குளிரிலும், களைப்பிலும், காற்றிலும், பனியிலும் அவர்கள் இரண்டு வருஷங்களாய் விடாது கவனித்துக் காவல்காத்து வந்தார்கள். பிரிடிஷ் கப்பற்படைத்தலைவர்களில் ஒருவரான (Collingwood) காலிங்வூட் என்பவர் சமுத்திரத்தில் கப்பலுக்கு நங்கூரம் போடாமல் 22 மாதங்கள் இருந்தது ஒரு மேன்மைபொருந்திய மாலுமித் தன்மையைக் காட்டத் தகுந்தது. வேலையில் பற்றுவிடாமை, சலிப்பில்லாத பாதுகாப்பு இவைகள் மாலுமிக்கு வேண்டிய குணங்களாம். கடல் யுத்தத்தை முடிவாக்கிய சண்டையில் காட்டிய வீரத்தன்மை எவ்வளவு ஆச்சரியப்படத்தக்கதோ அவ்வளவு இதுவும் ஏற்றதாக இருக்கிறது. நெப்போலியன் தன்னுடைய கப்பற்படையை ஒன்று சேராதபடி தடுக்கும் பிரிடிஷ் காவல்நாவாய்களைத் தூரத்திவிடவும், பிரிடிஷ் கப்பற்படை யில்லாத சமயத்தில் இங்கிலீஷ் கால்வாயைப் பிடித்துக்கொள்ளவும் உள்ள தந்திரத்தை ஒன்றின் பின் ஒன்றாகவும், உபாயத்தின்மேல் உபாயத்தையும் கையாடினான். 1804-ம் வருஷம் டிசம்பர் மாதம் இங்கிலீஷ்காரருக்கும் ஸ்பானியருக்கும் யுத்தம் ஆரம்பமானபொழுது நெப்போலியன் பக்கம் ஸ்பானியக் கப்பற்படையும் வந்து சேர்ந்துவிட்டது.

கடைசியில் நெப்போலியன் செய்த உபாயங்களில் ஒருபாகம் பலித்தது. பிரான்சுக் கப்பற்றலைவன் 18 கப்பல்களோடு 100 வருஷங்களுக்கு முன்னே ஜுன் மாதக்கடைசியில் (Toulon) டூலான் துறைமுகத்திலிருந்து தப்பித்துக்கொண்டு போய் சேர்ந்து, கடைசியில் (Cadiz) கெடிஸ் கப்பற்றுறைமுகத்தில் 40 கப்பல்களைச் சேர்த்தான். அக்டோபர் மாதத்தில் அவன் இந்த 40 கப்பல்களுடன் 31 கப்பல்கள் வைத்திருந்த (Nelson) நெல்சனை சண்டைசெய்யத் தீர்மானித்தான். 21உ பகலுக்கெல்லாம் இரண்டு கப்பற்படைகளும் ஒன்றுக்கொன்று மெள்ள மெள்ள மெல்லிய காற்றடிக்க சமீபித்தன. பிரிடிஷ் கப்பல்கள் இரண்டு அணிகளாக நெல்சன் என்பவராலும் காலிங்வூட் என்பவராலும் நடத்தப்பட்டு தங்களை நீண்ட இரட்டை வரிசையாய்ச் சந்தித்த பகைவர்மேல்விழுந்துதாக்கின. அதன்பிறகு உண்டான பயங்கரமான கொடிய சண்டையை விஸ்திரித்துக் கூறுவது இங்கு அசாத்தியமாகும். பிரிடிஷ் அணிகள் பிரான்சிய அணியை இரண்டு இடங்களில் குத்திட்டுச் சென்று, அவ்வாறு பிரிக்கப்பட்டு அடைபட்ட சில கப்பல்களை நாசஞ்செய்து அதன் பிறகு உதைபட்ட அணியின் பிரிக்கப்பட்ட இரண்டு முனைப்பாகங்களும் முறையே தோற்கடிக்கப்பட்டன. பீரங்கி வெடி தீர்ந்தது பயங்கரமாயிருந்தது. 33 பெரிய சண்டைக் கப்பல்களில் ஒன்று முழுகடிக்கப்பட்டது, 17 பிடிபட்டன, 15 ஓடிப்போய்விட்டன. பிரான்சிய கப்பற்றலைவன் சிறையானான். ஆனால் இங்கிலீஷ் தலைவன் இறந்துபோனார். அவர் தன் ஜெயம் நெப்போலியன் இங்கிலாந்தின்மேல் படையெடுக்கச்செய்த எல்லா உபாயங்களையும் நாசஞ்செய்த அத்தக்ஷணத்திலேயே

இறந்தார். சண்டைக்குப்பிறகு ஒரு பெரிய புசல் காற்றுகிளம்பியது. சண்டையானது புசல் காற்றோடு முந்திய சண்டையைவிட ஏறக்குறைய மிகவும் பயங்கரமாய் இருந்தது. ஓடிப்போன 15 கப்பல்களில் 4 கப்பல்கள் இங்கிலீஷ் கப்பல்களால் பிடித்துக் கொள்ளப்பட்டன. மீதி 11 அவைகள் நாசமாகக்படுகிற வரையில் கெடிஸ் கப்பல் ரக்ஷகத் துறையில் அசக்தமாகிக் கிடந்தன.

பாய்களாலேயே நடத்தப்பட்ட நெல்சனுடைய மரக்கலங்களுக்கும் நீராவியால் நடத்தப்பட்ட டோகோ (Togo) வினுடைய இரும்புக் கப்பல்களுக்கும் எதிருவமை ஏராளமாயிருக்கிறது. கப்பல் யுத்தத்தில், ஆயுதங்கள் கப்பல்கள் முதலியவைகளில் உள்ள மாறுதல்கள் ஆச்சரியகர மாயிருக்கின்றன. ஆனால் இதிலும் ஆச்சரியமானது என்னவெனில், ஆசியாவின் அறகிழக்கில் ஒரு பராக்கிரம தீவு கிளம்பி யெழுந்து, ஐரோப்பாவில் பராக்கிரமமாகிய இங்கிலாந்து தீவு 100 வருஷங்களுக்கு முன்னே நெப்போலியனுடைய பேராசை கொண்ட ஜெயங்களை அடக்கி ஒடுக்கியதைப்போல ருஷியாவின் பராக்கிரம ஜெயங்களை அடக்கிவருகிறதுதான்.—தீ - வ.

# "MERRY WIVES" OF MODERN IND.

## [AFTER SHAKESPEARE'S "MERRY WIVES OF WINDSOR."]

(*By S. Ramaswami Aiyar, B.A.*)

# கற்பைக் காப்பாற்றிய பெண்கள்.

## இந்நாடகத்தின் வேஷதாரிகள்.

ராவபகதூர் பீமவர்மன்:

குணசுந்தரி, பானுமதி, } இவர்கள் பேரில் காமங்கொண்டவன்.

காமசந்திரன்...மோகனமாலையின் பேரில் காதல் கொண்டவன்.

விக்ரமவீரன்.

கேசவதத்தன்...விக்ரமவீரன், மருமகன்.

வீரசேனன், உக்ரசேனன், } இரண்டு சினேகிதர்கள்.

வாசலன்...வீரசேனனுடைய மகன்.

ப்ரதாபன்...கேசவதத்தனுடைய சினேகிதன். பள்ளிக்கூடத்து வாத்[தியார்.

பாரக்ரமன்...வைத்தியர்.

சுகுணன்...ஓர் பெரிய ஹோடல்காரன்.

கருப்பன், முத்தன்; } உக்ரசேனன் ஆள்கள்.

மார்த்தாண்டன், முனியன், வெறியன், வக்ரன்; } பீமவர்மனுடைய ஆள்கள்.

சுசீலன்...கேசவதத்தனுடைய வேலைக்காரன்.

வீரன்...பாரக்ரமனுடையவேலைக்காரன்.

பானுமதி...உக்ரசேனன் பெண்சாதி.

குணசுந்தரி...வீரசேனன் பெண்சாதி.

மோகனமாலை...வீரசேனன்பெண்; காமசுந்திரன் பேரில் காதல்கொ[ண்டவள்.

பத்மினி...பாரக்ரமன் சமையற்காரி.

### 6-வது காக்ஷி.

(378-வது பக்கத்தொடர்ச்சி.)

சுகுணன் ஹோட்டலில் ஓர் அறை.
பீமவர்மன், மார்த்தாண்டன் வருகிறார்கள்.

பீமவர்மன்:—அடே மார்த்தாண்டா, கடையில் போய், நல்ல லெம்னேட் இரண்டு சீஸாக்கள் வாங்கிக்கொண்டுவா சீக்கிரம். (போகிறான்.) என் தலைவிதியை நான் என்னசொல்லட்டும். நான் எத்தனையோ ஆசைவைத்துக்கொண்டு, உக்ரசேனன் பெண்சாதியை நன்றாய் அனுபவிக்கலாமென்று நினைத்துப்போனதற்கு, இதுதானா பிரயோஜனம். ஒரு கூடையில் என்னை, சுண்டெலிகளைப்போட்டு அடைப்பதுபோல அடைத்து விட்டார்களே. இதுவும் போதாதென்று பானுமதியில்விழும் சாக்கடையி

ல்லவா எறிந்துவிட்டு வந்துவிட்டார்கள். அட பாவிகளா, கொஞ்சமாவது தயவுவேண்டாமா. இன்னுமொருதரம் அகப்பட்டுக் கொண்டேனானாலும்சரி, அங்கே இன்னும் சற்று தாமதித்திருந்தாலும்சரி, அல்லது அந்தக் கூடையை அவள் புருஷன் சோதனை போட்டபோதிலும்சரி, என் மண்டையை உடைத்து என் சதையை அறுத்து நாய்க்கும் நரிக்கும் ஒரு மாசத்து விருந்து போட்டுவிடுவார்கள். அயோக்யப்பயல்கள் குருட்டு நாய்க்குட்டிகளை தண்ணீரில் அழுத்திக் கொல்வதுபோல கொஞ்சங்கூட நிதானிக்காமல் ஒரே தூக்காய் தூக்கி தண்ணியில் எறிந்து விட்டார்களே. என் தேகத்தின் பருமனே சொல்லவேண்டாம். தண்ணீரில் முழுங்குவதற்கென்றே ஏற்பட்ட மகாகனம்பொருந்திய ராயபகதூர் பீமவர்மன் தேகம். தண்ணீரில் மட்டும் என் தேகத்தைப் போட்டாலோ, அத் தண்ணீர் பாதாளலோகம் வரைக்கும் இருந்தாலும் கூட, ஸ்வபாவ கனத்தினால் பாதாள லோகத்தில் போய் சற்று தங்கித்தான் மேலே வரவேண்டும். என்னைப் போட்ட இடம் நல்லவேளையாய் ஆழம் இல்லை. இல்லாவிட்டால் நான் இன்னேரம் யமலோகத்தில் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட சாவை நினைக்கும்போதே என் உடல் நடுங்குகிறது. ஏனென்றால் செத்ததேகம் தண்ணீரில் ஊற ஊற பெருத்துப்போய் விடும். அதிலும் என் தேகம் அப்படி ஊறிவிட்டால் எல்லோரும் ஏதோ யானையை நீர் உருட்டிக்கொண்டு வந்துவிட்டது என்றல்லவா நினைத்து எல்லோரும் பார்க்க வருவார்கள். எனக்கு அப்போது உயிர் இருந்தாலும் பார்க்க வருபவர்களுக்கெல்லாம் டிக்கெட்டு வைத்தாவது பணம் சம்பாதித்து என் குதிரையின் அடகு நகையை மீட்டு விடுவேன்.

(மார்த்தாண்டன் இரண்டு சீசாக்களுடன் வருகிறான்.)

மார்த்தாண்டன்:—சுவாமி அன்றுவந்த பெண் பத்மினி உங்களுடன் பேசவந்திருக்கிறாள்.

பீமவர்மன்:—(தனக்குள்) நல்லது பானுநதி ஜலம் உள்ளே போயிருக்கிறதற்கு மேலல்லவா லெம்னேடு போடவேண்டும். (உறக்க) அடே அவளை வரச்சொல்.

(மார்த்தாண்டன் பத்மினியை கூட்டிவருகிறான்.)

பீமவர்மன்:—பெண்ணே வந்த சங்கதி என்ன, சீக்கிரம் சொல்.

பத்மினி:—பானுமதி என்னை தங்களிடம் அனுப்பினாள்.

பீமவர்மன்:—பானுமதியா பானுநதியா உன்னை அனுப்பினது. எனக்கு பானுநதி இந்த ஜன்மத்துக்கு போதும். எல்லோரும் சேர்ந்து என்னை பானுநதியில்தான் போட்டார்கள். எனக்கு இன்னும் பானுமதி வேண்டுமா. என் வயிறுநிறைய பானுநதியாகத்தான் இருக்கிறது. பெண்ணே இனிமேல் எனக்கு பானுமதி வேண்டாம்.

பத்மினி:—தாங்கள் பானுமதிபேரில் அப்படி வருத்தப்பட்டுக் கொள்ளக்கூடாது. இது அவள் பிசகல்ல. அவளும் இப்போது தெரிந்துகொண்டு ரொம்பவும் வருத்தப் படுகிறாள். நேற்று அவளுடைய ஆள்கள்பட்ட அடி சொல்லமுடியாது. அவள் சமயத்துக்கென்று சொன்ன உபாயத்தை அவர்கள் மறந்து விட்டார்கள். வண்ணான் கடையில் அழுக்கு துணிகளை கொட்டுங்கள் என்று சொல்வதற்கு அவள் சுருக்கமாக கடையில் கொட்டுங்கள் என்று சொன்னதை சாக்கடையில் கொட்டுங்கள் என்று சொன்னதாக அந்த முட்டாள்கள் நினைத்து விட்டார்கள். சொன்ன உபாயத்தை மறந்து விட்டார்கள்.

பீமவர்மன்:—அதற்கென்ன செய்கிறது. என் தலைவிதி. யஜமானி அம்மாள் உபாயம் சொன்னாள். ஆள்கள் அபாயம் செய்து விட்டார்கள். நானும் பெண் பெண்டாட்டி வார்த்தையை நம்பிபோகக் கூடாதென்று இப்போதுதான் தெரிந்துகொண்டேன்.

பத்மினி:—அய்யோ அவள் வருத்தப்படுவதை நான் என்னவென்று சொல்லட்டும். தாங்கள் அங்கே இருந்தால் நீங்கள் அவளுக்குத் தேறுதல் சொல்லவேண்டியிருக்கும். அவள் புருஷனை எப்போதும் வைதுகொண்டு, பாவி சமயத்தில் எமன்போல் எங்கிருந்தோ வந்துவிட்டானே யென்றும், தாங்கள் பட்ட அவஸ்தையையும் நினைத்து

அவளுக்கு நேற்றைக்கு ஆகாரமே செல்லவில்லை. அழுதவண்ணமாகவே இருந்தாள். இன்றைக்கு கொஞ்சம் தனக்குத்தானே தேறி, இன்றைக்கு 8 மணிமுதல் 9 மணிவரையில் அவள் புருஷன் எங்கேயோ போயிருப்பான். அப்போது தாங்கள் கட்டாயம் வரவேண்டுமென்று சொல்லிவரச்சொன்னாள். நான்சீக்கிரம் போய் அவளுக்கு பதில் சொல்லவேண்டும். நீங்கள் நேரில்போனால் அவள் மன்னிப்புக் கேட்டுக்கொள்வதையும் தவிர, நேற்று பட்ட கஷ்டத்துக்கும் சேர்த்து அதிக சுகத்தை யடையலாம்.

**பீமவர்மன் :**—நல்லது நான் வருகிறேன். இந்த சமயமாவது இப்படிப்பட்ட அசந்தர்ப்பங்கள் நேரிடாமல் பார்த்து ஜாக்கிரதையாக இருக்கச்சொல்

**பத்மினி :**—நல்லது நான் சீக்கிரம் அவளுக்கு பதில் சொல்லவேண்டும் போய்வருகிறேன்.

(போகிறாள்.)

**பீமவர்மன் :**—கமலாகரர் ஏன் இன்னும் வரவில்லையோ தெரியவில்லை. தான் கட்டாயம் வருவதாகவும், என்னை இங்கேயே இருக்கும்படிக்கும் சொன்னாரே. அவர் பணமும் நமக்கு சமயத்தில் உபயோகமாயிருக்கிறது. ஓகோ அவரே இதோ வந்து விட்டார்.

(உக்ரசேனன் மாறுவேஷம் பூண்டு வருகிறான்.)

**பீமவர்மன் :**—கமலாகரரே, நீர் நேற்று சொன்னபடி உக்ரசேனன் பெண்டாட்டி விஷயமாக கேழ்க்க வந்திருக்கிறீர் அல்லவா.

**உக்ரசேனன் :**—ஆமாம் சுவாமி. தாங்கள் அனுபவித்தாய்விட்டதா அவளை.

**பீமவர்மன் :**—அதிகமாக அனுபவித்து விட்டேன். அந்த சூடு அடங்குவதற்குகூட, சாக்கடை தண்ணீரில் வெகுநேரம் ஸ்நானம்செய்து கொண்டிருந்தேன்.

**உக்ரசேனன் :**—என்ன விசேஷம் நடந்தது. எனக்கு விபரமாகச் சொல்லுங்கள்.

**பீமவர்மன் :**—நான் உம்மிடம் பொய் சொல்லலாமா. நேற்று அவள் சொன்ன மணிக்கு அவள் வீட்டிற்குப் போயிருந்தேன்.

**உக்ரசேனன் :**—அப்புறம் என்ன நடந்தது.

**பீமவர்மன் :**—அந்தக் கஷ்டத்தை என் சொல்லச் சொல்லுகிறீர்.

**உக்ரசேனன் :**—என் அப்படி. அவள் பிறகு எதாவது மனதை மாற்றி விட்டாளா என்ன.

**பீமவர்மன் :**—அப்படி ஒன்றுமில்லை. ஆனால் அந்த அயோக்கிய படவாபயல் இருக்கிறானே அவள் புருஷன், கையாலாகாதபயல், அவன் எதோ சந்தேகப் பட்டுக்கொண்டு, அனேகம் பேர்களை கூட்டிக்கொண்டு வீட்டில் எதோ திருட்டு புருஷன் வந்திருப்பதை காண்பிக்கிறேனென்று வீட்டிற்குள் வந்து விட்டான். அப்பொழுதுதான் நான் அவளிடம், சற்று சந்தோஷமாய் பேசிக்கொண்டும் சற்று வேடிக்கைகள் செய்துகொண்டும் இருந்து அதிக சுகத்தை அடைய பிரயத்தினம் செய்துகொண்டிருந்தேன். அதற்குள் இந்தப்பாவி, எங்கள் ஆசைக்கு யமன்போல வந்துவிட்டானே.

**உக்ரசேனன் :**—என்ன நீர் அங்கே இருக்கும் போதேயா வந்துவிட்டான்.

**பீமவர்மன் :**—ஆமாம்.

**உக்ரசேனன் :**—அப்படியானால் நீர் உடனே அகப்பட்டிருப்பீரே. அப்புறம் என்ன நடந்தது.

**பீமவர்மன் :**—முழுவதும் சொல்கிறேன் கேளும். நல்லவேளையாய் எங்களைப்பிடித்த நல்ல அதிர்ஷ்டமும், அவன் பெண்டாட்டியை பறிகொடுக்க வேண்டிய துரதிர்ஷ்டமும் ஒன்று சேர்ந்து ஒரு குணசுந்தரி என்பவளை சமயத்தில் கொண்டுவந்து விட்டது. இவள் ஓடிவந்து புருஷன் வருகிறதை சொல்லி இருவர்களும் ஒன்று சேர்ந்து யோஜித்து, அங்கே இருந்த ஒரு பெட்டிக் கூடையில்போட்டு, அழுக்குகளை மேலேபோட்டுமூடி, வண்ணானுக்கு போடவேண்டிய அழுக்கென்று சொல்லி என்னை வெளியே தாட்டிவிட்டார்கள்.

**உக்ரசேனன் :**—கூடையில் உம்மை போடமுடிந்ததா.

**பீமவர்மன் :**—அத்துடன் என்னை விட்டார்களா கந்தைத்துணிகள் எத்தனை. எத்தனை அழுக்குத் துணிகள். எத்தனை எண்ணெய் ஜிட்டுபிடித்த துணி

கள். கமலாகாரே, அதன் நாற்றத்தில் ஆயிரத்தில் ஒருபங்கு, மூக்கை கெடுத்து வாசனையே அறிய முடியாமல் செய்துவிடும்.

உக்ரசேனன் :—அதில் எங்நேரம் அப்படியிருந் திருப்பீர்.

பீமவர்மன் :—நான் என்ன செய்யட்டும். உமக்காக நான் இந்த பெண்பெண்டாட்டியுடன் அவஸ்தைப் பட்டதை நான் என்னசொல்லட்டும். கூடையில் என்னை போட்டு அடைத்து ஆள்களை கூப்பிட்டு இந்த மூட்டையை வண்ணான் வீட்டுக்கு கொண்டு போங்கள் என்று சொன்னாள். அவர்கள் உடனே தோளில் தூக்கிக்கொண்டு வெளியே போகும் போதே, பாதியில் இந்த அசிகைக்கார காமாட்டிப் பயல் வந்துவிட்டான். வந்த உடனே அவர்களை நிறுத்திக்கொண்டு கூடையில் என்னவென்று கேட்டான். அவன் எங்கே அதை சோதனைபோடுவானோ என்று கூடைக்குள் இருந்துகொண்டு நான் நடுங்கின நடுக்கம் சுவாமிக்குத்தான் தெரியும். ஆனால் விதி அவன் பெண்சாதியை எனக்கு என்று ஏற்படுத்தியிருக்கிறதல்லவா. உடனே அவன் உள்ளே சோதனைபோடப்போய்விட்டான். நானும்என்சினேகிதர்கள் அழுக்குத் துணியோடு வெளியே கொண்டு போகப்பட்டேன். நான் கூடைக்குள் இருந்துகொண்டே மூன்றுவிதத்தில் கஷ்டப்பட்டேன். ஒரு பக்கம் பயம் எங்கே கண்டுபிடித்து கொன்றுவிடுவானோ என்றும்; மற்றொருபக்கம், காற்று இல்லாமல் சிறு பெட்டியில் என் சதையெல்லாம் புதுங்கிவா அதையும் அமுத்தி அமுத்தி தலைகணியில் பஞ்சு அடைப்பதுபோல அடைத்து விட்டதில் என் தேகம் கஷ்டப்பட்டது ஒருபக்கம். மேலும் சாதாரண இருக்கத்திலேயே வெண்ணெய்போல உருகும் என்தேகம், அவ்வளவு அழுக்குகள் மத்தியில் மூச்சு அடைத்து இறந்துபோகாமல் தாங்கினதுதான் ஆச்சரியம். இந்த அவஸ்தை யெல்லாம் போதாதென்று என் உஷ்ணமெல்லாம்தணிய பானுநதிப்பக்கத்து பெரிய சாக்கடையில், அயோக்யப்பசகள் பூனைக்குட்டியை எறிவதுபோல எறிந்துவிட்டார்கள்.

உக்ரசேனன் :—அய்யோ என்னால் தாங்கள் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறீர்கள். இனி எனக்கு இந்தப்பெண் கிடைக்காமல் போனாலும் போகிறாள். இனிமேல் நீங்கள் அவள் மூஞ்சியிலேயே முழிக்க வேண்டாம்.

பீமவர்மன் :—கமலாகாரே இதற்கெல்லாம் இந்த தேகம் அஞ்சுமா. முதல் தடவை அகப்பட்டேன். பானுநதியில் எறிந்தாள். இரண்டாம் தடவை அகப்பட்டு ஆலைக்கொப்பறையில் போட்டாலும் போடட்டும், இவளை விடுகிறதில்லை. அவள் புருஷன் இன்று காலை வெளியே போகப் போகிறானாம். அவள் மறுபடியும் எனக்கு சொல்லி யனுப்பி இருக்கிறாள். 8 மணி முதல் 9 மணிக்குள்ளாக நான் போக வேண்டும்.

உக்ரசேனன் :—8 மணி இதோ ஆகி விட்டதே.

பீமவர்மன் :—அப்படியானால் நான் இதோ போகிறேன். பிறகு சாவகாசமாய் நீர் வாரும். எல்லா சங்கதிகளையும் உமக்கு சொல்லுகிறேன். இந்தத் தடவை நான் கட்டாயம் அந்த அயோக்யப்பயலை ஏமாற்றி விட்டு, அவளை அடையப் போகிறேன். நாளைக்கு நீர் அவளிடம் படுத்துக் கொள்ளப் போகிறீர்.

(போகிறான்.)

உக்ரசேனன் :—இதென்ன அநியாயமாயிருக்கிறது. இதென்ன வெளித்தோற்றமா, கனவா, அல்லது தூக்கமா. நான் அத்தனை பேர்களைக்கூட்டிக் கொண்டு போயும் முட்டாள் தனமாக அந்த பெட்டிக் கூடையை சோதனை போடாமல் விட்டுவிட்டேனே. இருக்கட்டும் கலியாணம் செய்துகொள்ளும் பிரயோஜனம் இதுதான். வண்ணானுக்கு அழுக்கு துணிகள் போடுவதற்கு பெரியகூடைகள் வைத்திருப்பதற்கும் பிரயோஜனம் இது தான். நல்லது நான் சீக்கிரம் போய் இந்தத் தடவை என்னை இன்னானென்று தெரிவிக்கிறேன் இந்தப் பயலை விடுகிறதில்லை. இவனோ என் வீட்டிற்குள்ளிருப்பது நிச்சயம். எங்கேயும் தப்பித்து ஓடமுடியாது. இந்தத் தடவை பெருங்காயசொப்பு முதல் சோதனை போடுகிறேன். அவனைப்பிடித்த நல்ல அதிர்ஷ்டம் எந்த விதத்தில் காப்பாற்றுகிறதோ இந்தத் தடவை பார்க்கிறேன். எல்லாரும் இந்தத் தடவை என்னை மறுபடிகேலி செய்தாலும் செய்யட்டும் ஆனால் நான் கண்டுபிடித்து விட்டால், என்னை எல்லோரும் கொண்டாடுவார்கள் அல்லவா. தெரியக்கூடாத விதிகளை தடுப்பது கஷ்டம். தெரிந்ததை தடுக்கக்கூடாமலல்லவா என்னிடத்தில் சாமர்த்தியம் இல்லாமல் போய்விட்டது. இதோபோகிறேன்.

(போகிறான்.)

(இன்னும் வரும்.)

## On Devotion and Love.—To Parents.

## பக்தி சிரத்தை.

II.

"அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்."

சென்ற எப்பிறல்மாதப் பத்திரிகையில் பக்தி சிரத்தை என்ற இரண்டும் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு அத்தியாவசியமென்றும் முன்சொன்ன பதிமூன்று கெட்ட குணங்களில் ஏதாவதொன்று ரவலேச ரிருந்துவிட்டாலும் தீங்கை இழைக்குமேயன்றி நன்மை செய்யாதென்றும் கூறினோம்.

எப்படியெனில், முன்காலத்தில் பக்தியில் சிறந்த மார்க்கண்டேயர் வேதாந்த சாஸ்திரங்களைப் படித்துத் தெளிந்துவிட்டோம்! பக்தியில் கரைகண்டுவிட்டோம்! இனி நமக்கு வேண்டியதென்ன? யொன்று மில்லையே என நினைத்து மகமேருவின் சிகரத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டார். உடனே பிரமாதமான ஜலப்பிரளய முண்டாய் எங்கும் ஜலக்காடாயிருந்தது. மார்க்கண்டேயர் அதில் நீந்தி தத்தளித்துக் கடைசியில் ஓர் ஆலிலைமேல் சிறு குழந்தை யொன்று தத்தளித்துக்கொண்டிருப்பதைக் கண்டார். மாயையினால் அதை இன்னதென்று தெரிந்துக்கொள்ளாமல்! ஐயோ! ஒரு குழந்தை தத்தளிக்கிறதே, அதை காப்பாற்றவேண்டும், இல்லாவிட்டால் இன்னும் ஒரு க்ஷணத்தில் அது முழுகி இறந்துபோகும். குழந்தை வெகு இலக்ஷணமாயிருக்கிறது, என்று இரக்கங்கொண்டு கிட்டவந்தார். அப்பொழுது பகவானாகிய அக்குழந்தை எப்படி விளங்குகிறதென்றால் தன்னுடைய காலின் கட்டவிரலை வாயில்வைத்துக்கொண்டு சப்பி ருசிபார்க்கிறது. (இது குழந்தைகளின் சுபாவம்). இதற்குக் காரணமென்னவென்றால் பிரளயகாலத்தில் சகல அண்டசராசரங்களும் சர்வஜீவகோடிகளும் பகவானது குக்ஷியிலிருக்கின்றன. அவைகளை ரக்ஷிக்கும்பொருட்டு தமது கால் பெருவிரலிலுள்ள அமிருதத்தை உள்ளே செலுத்துகிறாரென்று சிலரும், சர்வலோகங்களிலுமுள்ள ஜீவாத்மாக்களும் தமது பாதத்தையே மனத்திலுன்னி வணங்குவதால் அதிலுள்ள சாரத்தை அறியும்பொருட்டு அங்ஙனம் செய்கிறாரென்று சிலரும் கூறுவர். இக்குழந்தையண்டை மார்க்கண்டேயர் வந்துசேர்ந்தார். குழந்தை ஒருமூச்சை உள்ளே இழுத்தது. மார்க்கண்டேயரும் அம்மூச்சின் வழியாக குழந்தையின் நாசிக்குள் போய்விட்டார். உடனே அங்கே பூலோகத்தைக் கண்டார். மறுபடியும் மேருமலையின் உச்சியைக் கிட்டினார். அதன் சிகரத்தில் உட்கார்ந்தார். ஆ! பிரளயத்திற்குத் தப்பிப் பிழைத்தோம் என்று உற்சாகங்கொண்டார். குழந்தை கொட்டாவி விட்டது மார்க்கண்டேயர் வாய்வழியாய் வெளியேவந்து சமுத்திரத்தில் விழுந்தார். கரைகாணாது தத்தளித்தார். நீந்தினார். மறுபடியும் முன்கண்ட குழந்தையைக் கண்டார். உள்ளே சென்றார். வெளியே வந்தார். இம்மாதிரி ஏழுதடவை உள்ளே சென்று வெளியே வந்து தத்தளித்து ஒன்றும் தோற்றாமல் நித்தியானந்த சுரூபர்களான வசிஷ்டர் முதலிய ரிஷிகளைக் கண்டு, நீங்கள் இந்த ஏழு பிரளயத்திற்கும் எங்கேயிருந்தீர்கள்? எப்படி தப்பித்துக்கொண்டீர்கள்? என,—அவர்கள்: "மார்க்கண்டேயரே உமக்கு சித்தம் பேதித்ததா என்ன? பிரளயமாவதேது? தப்புகிறதாவதேது? என்றார்கள். உடனே மார்க்கண்டேயருக்கு ஞானமுண்டாகி, தான் வேதாந்த சாஸ்திரங்களை அறிந்தும், பக்தி செய்தும் பிரயோஜனமில்லை, இன்னும் பகவானுடைய மாயையிலிருந்து விடுபடவில்லையென்று, சாக்ஷாத் ஸ்ரீ வாசுதேவனைப் பிரார்த்தித்து பக்திசெய்தார். உடனே மாயையினின்றும் விடுபட்டார். ஏழு கற்பங்களைக் கண்ட மார்க்கண்டேயரே, இவ்வித கஷ்டங்களை யனுபவிக்க நேருமானால் நம்போலிய சாமான்னியர்களின் கதி யெப்படியாகுமென்பதை யோசியுங்கள். ஆகையால் துர்க்குணங்களை நீக்கி பூரணமான பக்தியை இந்துக்களாகிய நாம் முதலெடுப்பில் மாதா பிதாக்களிடத்திலும், இரண்டாவதாக குருவினிடத்திலும், கடைசியாக ஈஸ்வரரிடத்திலும், செய்ய வேண்டிய தவசியம்.

நாம் முந்தி மாதாபிதா பக்தியைப்பற்றி யோசிப்போம். சந்திரபாகா நதிக்கும் திண்டிரவனத்திற்கும் மத்தியில் ஒரு நாடு இருந்தது. அதில் பகவானை யொருநாளும் நினையாதவனுகியும் மனையாளைப் புகழ்பவனுகியும், மாதாபிதாக்களை இகழ்பவனுகியும், தர்மம் செய்யாதவனுகியும் ஒருதடவைகூட பகவான் திருநாமத்தை உச்சரிக்காதவனுகியும், சாதுக்களைக் கண்டால் தூஷிப்பவனுகியும் தையலரைப் பூஷிப்பவனுகியும் ஒரு அந்தணனிருந்தான்.

இவன் முன்னோர்கள்செய்த பூஜாபலத்தினலோ, ஸ்தல மகிமையினலோ, அல்லது அதிர்ஷ்டவசத்தினலோ ஒரு புராணிகர் காசிகாண்டத்தை தினப்படி வாசிக்க எற்பட, அவ்வூரிலுள்ள அனைவரும் அப்புண்ணிய சரித்திரத்தைக் கேட்கப் பெருங்கூட்டங்களாகச் செல்லுவதைக் கண்ட இந்த பிராமணருடைய மனைவியும், ஒரு தினத்தில் தன்னையும் அவ்விடத்திற்கு கூட்டிக்கொண்டு போகும்படியாகவும், அந்த பாகீரதியின் மகத்துவத்தையும், வாரணுசியின் சிறப்பையும்கேட்க விரும்புகிறதாகவும் பிரார்த்தனை செய்ய, பிராமணர் அடி பேதாய்! வீட்டில் பலவேலைகளிருக்க புராணங்கேட்டால் அன்னமகப்படுமா? சொர்ணமகப்படுமா? காமிகள் புண்ணியகதைகளைக் கேட்பதாற் பிரயோஜனமுண்டா? கேட்டபின் அவ்வழியில் நடக்கவேண்டாமா? சிரவணஞ் செய்த மார்க்கத்தில் நடக்காதவருக்கு நரகமே பிராப்தியாகுமன்றோ! அரசன் சாற்றின வண்ணம் நடக்காத மாந்தருக்கு ஆக்கினை கிடைப்பதுபோல பகவான் சரித்திரத்திலுள்ளதைக் கேட்டு அவ்வண்ணம் நடக்காவிட்டால் குற்றத்திற்கு ஆளாகவேண்டுமே, நான் வரமாட்டேன், நீ மட்டும் வேண்டுமானல் செல்லலாமென,—அம்மாது சொல்லுகிறாள்:—புராணம் கேட்கும் பலரில் ஒருவனே அதன் சாராம்சங்களையறிந்து நல்ல வழியில் நடந்து மோக்ஷ சாம்பிராஜ்யத்தை யடைகிறான். மற்றவர்களிற் சிலரோ நாடோறும் கேட்கும் பலத்தினல் துர்க்குணங்கள் நீங்கி சீக்கிரத்தில் நற்குணத்தில் பிரவேசிப்பார்கள். சிலர் பாபகர்மங்கள் செய்வதில் வரவர அச்சமுற்று, காலம் செல்லச்செல்ல சத்கருமத்தில் பிரவேசிப்பார்கள். மற்றும் சிலர் பாப கர்மத்தை முன் போலவே செய்தாலும் சிரவணஞ் செய்யும் வேளையில் மாத்திரமாவது நல்ல எண்ணங்கொண்டு மறு ஜன்மத்திலாவது நற்குணமடைவார்கள். சங்கதி யப்படியிருக்க புராணங்கேட்டவுடனே, யதன் பிரகாரம் நடக்கச் சக்தியுள்ளவனே கேட்கவேண்டுமென்று சொல்வது சரியாகுமா? சிரத்தையின்றிப் புராணங் கேட்டாலும் புண்ணிய லோகம் கிடைக்குமென்று வேதங்கள் முறையிடுகின்றனவே. எனக்கு விவாகமாகு முன் நாடோறும் புராணங்கேட்பதிலேயே காலங் கழித்தேன், விவாகமான பிறகு பதியே தெய்வமெனவுணர்ந்து உமது பணிவிடையே சகல விருதங்களுக்கும் சிரேஷ்ட மானதெனவறிந்து, புராணங்கேட்பதையும் விட்டேன். எனக்கு, உமதிஷ்டப்படி நடக்கும் ஒழுக்கமே மோக்ஷமளிக்கும் மார்க்கமாகும். உமக்கோ சாஸ்திரங்கள் கேட்கவும் அதன் வழி நடக்கவும் பூர்ணமான சிரத்தையிருக்கவேண்டும். உம்மைப் பிரிந்து நான் மட்டும் புராணங் கேட்கப் போவது பகவானைப் புகழ்ந்து பரமசிவனை நிந்திப்பதற்கு சமானமாகும் என உரைத்து, பதியின் மனதைக் கரைத்து, புராணபடனஞ் செய்கிற விடத்திற்கு கணவருடன் சென்று ஒரு மூலையிலிருந்து கேட்டுக்கொண்டிருக்கையில், புராணிகர், பகீரதன் பரமசிவனைக்குறித்துத் தவமியற்றி பாகீரதியைக் கொண்டுவந்ததும், பஸ்மமாய்ப் போன சகரர்மேல் கங்கைபிரவாகித்ததும், சகரர் புண்ணிய லோகமடைந்ததும், கங்காநதி ஸ்னனத்தால் கோஹத்தி, சிசுஹத்தி, பிரமஹத்தி, ஸ்திரீஹத்தி, குருஹத்தி, முதலிய பாவங்கள் பஞ்சாய்ப் பறக்குமென்று பகீரதனுக்கு பாகீரதி வரமளித்ததும், வாரணுசியில் மரணமடைந்தவர்கள் செவியில் விஸ்வநாதர் தாரக மந்திரத்தை உபதேசிக்கிறதையும், சாநதியின்கரையில் முனீஸ்வரர்கள் வாசஞ் செய்கிறார்களென்றும், சில புண்ணியவான்களுக்கு இப்பொழுதும் தரிசனந்தருகிறார்களென்றும் சொல்லக் கேட்ட இவர்கள், உடனே காசியாத்திரை செய்யப் புறப்பட்டுப்போக, வயதுசென்ற தாயும் தகப்பனும் இவர்களுக்கு வேண்டிய சாமான்களைத் தலையில் சுமந்து கொண்டுபோய் தங்குமிடங்கள் தோறும் இவர்களுக்கு சமையல் செய்து போட இவர்கள் வாரணுசியை நினைத்துக்கொண்டு, காடு மலை வனுந்திரங்களைக் கடந்துபோக, மனைவி நடக்கச் சக்தியற்றவளாய் வாடுவதைக் கண்டபுருஷன், அவளைத் தன் தோள்மேல் எற்றிக்கொண்டு, தாய்

தந்தையருடைய கஷ்டத்தை கவனிக்காமல், காசிக்குச் சமீபத்திலுள்ள குக்குட மகா ரிஷியாசிரமத்தையடைந்து, அவருடைய மகிமையைக் கேள்விப்பட்டு, காணுவதற்கவாக்கொண்டு, கிரகத்தை நாடித் தனியாகச் சென்று, அவரைக் காணமல், கங்கை, யமுனை, சரஸ்வதி, நர்மதை, கௌதமி என்னும் பஞ்ச கன்னிகைகளைக் கண்டு, இவர்கள் தேவ மாதர்களோ, கந்தர்வ ஸ்திரீகளோ, பஞ்ச கன்னிகைகளோ வென பயந்து, "புண்ணியவதிகளே.—உங்களுடைய ரூபத்தைப் பார்த்தால் தெய்வப் பெண்கள்போல் தோற்றுகின்றது. உங்களுக்குப் பணிவிடைசெய்யப் பாங்கிகள் இல்லாமற் போனதென்ன? யாருக்காக அதிக ஆத்திரப்பட்டு பலகாரம் தயாரிக்கிறீர்கள்?" என வேண்டினன். அடியேன் சங்கையைத் தீர்த்தீர்களானல் நானே நீங்கள் செய்கிற பணிவிடைகளை செய்வேன். அல்லது எனது பத்தினியைக்கொண்டு செய்விப்பேன் என சாற்றினன்.

இப்பக்தனைக் கண்ட பஞ்ச கங்கைகளும் முனி சிரேஷ்டர்களுக்கும் அரிதான நமது தரிசனம், மாதா பிதாக்களை வாட்டின கோட்டானுக்கு புலப்படக்காரணமேது? அடா துன்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! இவ்விடம் விட்டுப்போவென்று அதட்டும் போது, இவன் மறுபடியும்.—"நீங்கள் யார்? யாருக்காக இவ்வித பலகாரங்கள் செய்கிறீர்கள்? என்பதை தயவுசெய்து தெரிவித்தால் போய்விடுகிறேன்" னென, அவர்கள் உண்மையைச் சொல்லக் கேட்ட இவன், குக்குடமகாரிஷி எங்கே என்று மறுபடியும் கேட்க, பஞ்சகங்கைகள் கோபித்து, நீ மறுபடியும் ஏதாவது கேட்பாயானல் சென்னியைப் பிடித்து கங்கையில் தள்ளிவிடுவோம் என்று சொல்ல, பக்தன் ஓ! ரூபவதிகளே, அப்பேர்க்கொத்த பாக்கியம் எனக்கும் கிட்டுமா? தங்கள் கைகளால் ஸ்பரிசிக்கப்பட்டு நான் கங்கையில் தள்ளப்படுவதைவிட எனக்கு வேறு என்னவேண்டுமென்று சொல்லிக்கொண்டே இவர்களுக்கு பணிவிடை செய்யத் தன் பத்தினியை அழைத்தான். பஞ்சகன்னிகைகள்.—அடே மடையா, உன் மனைவியை என் இங்கே யழைக்கிருய்? அப்படி செய்யாதே. அவள் வந்தால் நாங்கள் உடனே இவ்விடத்தைவிட்டு அகல நேரும். ரிஷி வந்தால் கோபிப்பார். அவரோ தமது மாதா பிதாக்களுக்கு சேவைசெய்யப் போயிருக்கிருர் எனக் கூறினர். பக்தன் சம்சார பந்தத்திலிருந்து நீங்கி பரபிர்மத்தை சதா தியானிப்பவரா அன்னை தந்தைமேல் அவாக்கொள்வார்? இது சந்தேகமெனக் கூறினன்.

பஞ்சகங்கைகள்.—அடா! அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். மாதா, பிதா, குரு, தெய்வம் என்கிற நான்கில் மாதாவே முதல் கண்ட தெய்வமாகும். இரண்டாவது போஷணை செய்த பிதாவாகும். மூன்ருவது ஞானமார்க்கத்தை போதிக்கும் குருவாகும். நான்காவது மோக்ஷத்தையளிக்கும் தெய்வமாகும். முதலெடுப்பிலேயே மூன்ரும்படியில் பாய்வாருமுண்டோ? அதுபோல் உன்னை பெற்று வளர்த்திய தாயும் தகப்பனும் சுமை சுமக்கவும், தங்குமிடங்களில் பாகஞ் செய்து படைக்கவும் செய்த கொடிய பாதகனுகிய உனக்கு, மாதா பிதாக்களுக்கு செய்யவேண்டிய பூஜையின் மகிமை தெரியுமோ? முதுமைப் பருவமுள்ள தாய் தந்தையரை கஷ்டத்திற்குள்ளாக்கி இடையில் வந்த மனையாளைச் சுமந்துக் கொண்டுவந்த உனக்கோ அன்னை தந்தைகளைப் பூஜிக்கும் பலன் தெரியும்?

ஸ்ரீரகுராமர் தமது குருவாகிய வசிஷ்டர், தந்தையாகிய தசரதர் முதலியவர்களுடைய வாக்கைக் கடந்து மாதுர்வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு 14 வருஷம் காடு வனங்களில் சஞ்சரிக்க வில்லையா?

ஒருவரன்றி இருவர் புணர்ந்தால் மகா குற்றமென்று அறிந்திருந்தும், மாதா வாக்கியத்திற்குக் கட்டுப்பட்டு பஞ்சபாண்டவர் ஐவரும் ஒரு கன்னிகையைக் கூடியிருக்க வில்லையா?

குரு, தெய்வம், தாசம், புத்திர மித்திரர்களை வெவ்வேறு சம்பாதிக்கலாம். மாதா பிதாக்களை சம்பாதிக்க முடியுமோ? அவர்களை மனம் நோகச் செய்து, அற்பச் சுகத்தைக் கொடுக்கும் சொற்பமான தோகையை சுமந்து வந்த வுனக்கு கங்காஸ்நானத்தால் உபயோகமென்ன? உன் விஷயத்தில் 'மாதாவை யொருநாளும் மறக்கவேண்டாம்' 'தந்தை சொன்மிக்க மந்திர மில்லை' என்ற பழமொழிகள் பொய்யா? என்று பலவித நீதி போதனைகளைச் சொல்லிக்கொண்டே குக்குடமகாரிஷிக்கு பலகாரங்களை செய்துவைத்து மறைந்தார்கள்.

இவ்வாச்சரியத்தைக் கண்ட பக்தன் உடனே திரும்பி வந்து தன் தாயையும் தந்தையையும் வணங்கி காவடிகட்டி இருவரையும் தூக்கிக் கொண்டு, தன் பெண்சாதி மற்ற சாமான்களை சுமந்துக் கொண்டுவர தன்னூர்சேர்ந்து ஒருநாள் தங்கி, மாதா பிதாக்களுடைய பணிவிடைகளில் இவனுக்குச் சிறந்தவர்கள் திரிலோகத்திலுமில்லை எனக் கூறும்படி, காசிக்ஷேத்திரத்தை யடைந்து தாயையும் தந்தையையும் கங்கையில் நீராடச்செய்து, அமுதூட்டி விடைபெற்றுக்கொண்டு குக்குடமகா ரிஷியின் ஆசிரமத்தை யடைந்து அவரைக்கண்டு வந்தனம் தந்து, பிர்மத்தின் சூக்ஷமத்தையும், மோக்ஷத்தின் காக்ஷியையுமறிந்து, தாயையும் தந்தையும்காவடியில் எடுத்துக் கொண்டு தன்னூர்சேர்ந்து மாதாபிதாக்களை வழிப்படுவதே சிறந்த தொழிலாகக் கொண்டிருந்தனன்.

இது இப்படியிருக்கையில் அந்த ஊருக்கடுத்த கோபாலபுரியில் சந்திராவளி என்னும் ஒரு உத்தமி பகவானையே விவாகம்செய்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தினால் 30 வருஷகாலமாய் கடோரமான தவமியற்றுவதைக் கண்ட மகாவிஷ்ணு இவளுடைய பக்தியை பரிசோதனை செய்யக் கருதி சதாசிவ வேடம்பூண்டு தரிசனந்தா, அவள் பகவானை விவாகம் செய்துக் கொள்ள வரங் கேட்க, வந்தவர் அவரை நிந்திக்க, அவள் ஒரே பிடிவாதமாய் அவரையே விரும்ப, பகவான் சந்தோஷமடைந்து, தன் சுயரூபத்தைக் காட்டி அவள் எண்ணத்தைப் பூர்த்தி செய்யக் கருதியபொழுது, ஆசைநாயகியாகிய ருக்மணி பகவானைக் காணுதவளாய் தேடிக்கொண்டு வந்து, இவர் இருக்கும் தேள்கொட்டிய திருடனைப் போன்ற நிலையைக்கண்டு மௌனமாய் கோபத்தினால் தன்முகத்தைத் திருப்பிக்கொண்டு நிற்க, சந்திராவளி 'இவள் ஏன் இந்த சமயத்தில் வந்தா'ளென்று குரோதம் கொள்ள, பகவானை ஒருதிவ்ய சத்தியானது 'கிர்' என்று இழுத்துக்கொண்டு போயிற்று. சந்திராவளியின் தபசக்திக்கும் ருக்மணியின் கோபசக்திக்கும் பலமான சக்தி இது. அது உடனே பகவானை சமீபத்திலோடும் சந்திரபாகா நதியில் இறக்கி, அக்கரையில் மாதாபிதா சேவை செய்துக்கொண்டிருந்த நமது பக்தாகிய புண்ணிய சீலரிடம் சேர்த்தது. பகவான்.—ஏ! பக்தா நீர் செய்கிற மாதாபிதா சேவையைக் கண்டு மகிழ்ந்தோம். உமக்கு சமானமானவர் ஒருவருமில்லை. நம் தரிசனந்தா மனமுவந்தோம். சீக்கிரத்தில் வந்து வேண்டியவரம் கேட்பீராக எனப்புகன்றனர்.

பக்தன், பகவானைத் திரும்பிப்பாராமல் நீர் யாரென, பகவான் நான்தான் வசுதேவருக்கும் தேவகிக்கும் மகவாய்ப்பிறந்த கிருஷ்ணன் என்று அறிந்துக் கொள், என, "ஹே! ஹரிபரந்தாமா, பக்தவத்சலா. உம்மை நினையாதிருக்கவும் காக்ஷிதரவந்தீரோ? சேற்றில் வெகுநேரமாக நின்றீரோ? கால்நொந்தீரோ? இதோ இந்த செங்கல்மேல் சற்று நிற்பீராயின் மாதாபிதாக்களுக்குச் செய்யவேண்டிய பூஜையை முடித்து வருகிறே"னென்று சொல்ல, பகவான் நல்லது, நீர் வருகிற வரையில் ஒரு அடியும் பெயர்த்து வைக்காமல் உமது வரவுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருப்போம். இந்தவரம் உமக்கு இப்பொழுதே தந்தோமென பக்தன் மாதாபிதாக்களை வீடுசேர்த்து சகல உபசாரங்களையும் செய்து பகவானை தரிசனஞ் செய்துவர உத்திரவு கேட்க, தந்தை ஏ பாலா, நீமட்டும் அந்த பகவானை தரிசித்தால் போதுமோ? இப்பண்டரியிலுள்ள ஒவ்வொருவரும் என்றும் தரிசிக்கும்படி செய்வாயாக என, உடனே பக்தன் தன் வீட்டைவிட்டு வெளிப்பட்டு தூரத்தில் நின்று கொண்டே கைகளை மேலே தூக்கி கண்களை மூடி பகவானைப்பார்த்தபடி ஏ! பாண்டுரங்கா நீர் என்றும் இப்படியே நின்று சகலருக்கும் தரிசனந்தந்து காத்து ரக்ஷிப்பதே எனக்குக் கொடுக்கத்தக்க வரமெனப்புகன்று, பகவானைப்பார்த்தபடியே நிஷ்டை சேர்ந்து பிர்மாநந்தத்தில் மூழ்கி தேகஸ்மரணை இழந்து நின்றார்.

"ஆகாசலிங்கத்தைக்கண்டேண்டி-இங்கே
யாருமறியாமல் நின்றேண்டி
ஏகாந்தமாக விருந்தேண்டி-மன
தேக்கந் துலைந்தது பாருங்கடி."

"சித்தஞ் சிதம்பரமாச்சுதடி-முன்
செய்த வினையெல்லாம் போச்சுதடி
சுத்தப் பிரம்ம மயமாச்சுதடி-யதைச்
சொல்லத் தெரியுமோ பாருங்கடி."
என்றபடி விளங்கினார்.

பகவானே அவருக்களித்த வாக்கின்படி அவர் சமாதியடையும் வரையில் சுயரூபத்துடனும், அதன் பிறகு சிலாரூபத்துடனும் நின்று காக்ஷிகொடுத்து வருகிறார். இந்த ஊரைத்தான் பண்டரிபுரமென்றும் இந்த பக்தரைத்தான் பண்டரிபக்தரென்றும் சொல்லப்படுகிறது. ஆகையால் மாதாபிதாக்களிடத்தில் பக்தி யிருக்கவேண்டியது அவசியம்.

T. C. வேங்கடரமணய்யர்.

## ஸ்ரீவாணீவிலாஸனீ.

இப்பெயர் கொண்ட மாதாந்தப் பத்திரிகையொன்று ஸ்ரீரெங்கத்திலிருந்து வெளியாய் நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இது மிகவும் நேர்த்தியாகவும் விசித்திரமாகவும் அச்சிட்டு முடிந்திருக்கிறதுமன்றி விஷயங்களும் பலவகைப்பட்டவர்களுக்கும் பொருந்தும்படியாக நானாவிதமாக அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் ஸ்ரீமத் ஜகத்குரு சங்கராசாரியஸ்வாமிகளின் திருவுருவப்படமொன்றும் ஆதி சங்காராசாரியார் சரித்திர விலாசமும் அமைந்திருக்கிறது. ஆசாரியஸ்வாமிகளின் திருவவதார மகிமையைப்பற்றி யெழுதியிருக்கும் வியாஸம் புராண தோரணையாக விருக்கிறதேயன்றி உண்மையை

உள்ளாய்ந்து உள்ளபடி தீட்டியதாகவில்லை. ஆயினும் அவதாரபுருஷர்கள் மகிமையை ஸ்வானுபவச்செல்வர்கள் உள்ளபடியுணர்ந்துவக்கவல்லரேயன்றி பெத்தர்களான ஜீவர்கள் முற்றும் உணர்வது கூடாமையாம். இதிலடங்கிய 10-விஷயங்களில் ஐந்தாவதான 'ஆத்மவித்யா விலாசம்' எழுதியவர், தியாஸபிகல் சங்கத்தைப் பற்றி யெழுத வுத்தேசித்து அதன் உட்கருத்தை விளக்குமாறு அந்த சமாஜம் ஏற்பட்டதின் நோக்கைவிளக்க ஆத்மதத்துவங்கள் என்றால் என்னவென்பது விளங்கச் சில வரிகள் தெளிவுற வெழுதியிருக்கிறார். வேதபூமியாகிய இப்பரத கண்டத்தில் அனாதியாயுள்ள ஆத்மவித்தையுங்கூட அந்நியர்கள் அங்கீகரித்திட்ட அவர்முஹர்-முத்திரையடையாளத்தைக்கொண்டே நம்மவர்கள் தெரிந்தெடுத்துக் கையாளவேண்டும்! இல்லாவிட்டால் அதுவும் ஏறாது. ஐயோ! மஹாத்துகள் வாசஞ்செய்த புண்ணிய பூமியாமிப் பரதகண்டத்து தித்து பூர்வத்திலுள்ள ரிஷிபரம்பரைகளென்று இன்றைக்கும் காதில் கையைவைத்துக்கொண்டு முழுநீளம் அபிவாதனம் சொல்லும் நம்மவர்கள் கதி யிப்படியாயிற்றே. ஜப்பானியர்களைப்போலாக வெண்டுமென்கிற ஆசைமட்டுமிருந்தால் போதுமா? ஆசைக்குத்தக்கபடி யூக்கமும் சாமர்த்தியமுமுண்டானாலல்லவோ, அந்த ஆசை யுண்மையா ஜோதாய் ஆத்மசங்கல்பம்போல் நிறைவேறும். இதனால் நாம் தியசாபிகல் சமாஜத்தையாவது அதையனுசரித்துழைப் பவர்களையாவது பழிக்க நினைத்ததாகக் கொள்ளக்கூடாது. அந்நியர்களானாலும் அவர்கள் நம்மதவுண்மைகளை யுள்ளபடி யுணர்ந்து அதையுலகெங்கும் பரவச் செய்யவேண்டுமென்று செய்யு முயற்சி மிகவும் சிலாக்கிக்கத்தக்கதே. நம்மவர்கள் கதி ரிஷி பரம்பரையிலுதித்தும் இப்படிக் கேவலமாயிற்றே யென்று சொல்ல வந்ததன்றி வேறு யாரையும் குற்றங்கூற நினைத்தோமில்லை. ஆத்ம தத்துவத்தை யுள்ளபடி பாடுபட்டுழைத்துணர நமக்கு எவ்வளவோ சாதன சாதகங்கள் இயல்பாக அமைந்திருந்தும் அவற்றை யுள்ளபடி யுண்மையிலுபயோகிக்காது துர்வினியோகப் படுத்தி இகம்பரமிரண்டிலும் கதியின்றி யுழலும் நம்மவர் நிலைமையை யுன்னில் ஐயோ வெட்கமும் பரிதாபமும் ஒருவரைப் பிடுங்கித்தின்பதாயிருக்கிறது. ஆத்மவித்தையின் பிரயோசனம் இத்தேகம் விழுந்தபின் தான் பலிக்குமென்கிற தப்பெண்ணம் நம்மவர் மனதில் எப்படியோ குடிகொண்டுவிட்டது. அதை நீக்கும் பொருட்டு என்ன சொன்னாலும் அவர்களுக்கு ஏறுவதில்லை.

"உடம்பினைப் பெற்றப் பயனாவதெல்லாம்
உடம்பினில் உத்தமனைக்காண்."

என்றுகூறிய ஔவை குறளும்நம்மவர்க்குப் பொய்மையாயிற்றே.

"மாசற்ற கொள்கை மனத்திலடைந்தக்கால்
ஈசனைக் காட்டுமுடம்பு"

என்று அவள் சொல்லியிருக்க, இகபர சாதனங்கள் இரண்டுக்கும் சாதகமான இவ்வுடம்பை யிகழ்ந்து வீண்வாச்சா வேதாந்தம் பேசி நலங்கெட்டு நன்மையிழந்து போகிறார்கள். ஜப்பானியர் அந்நிய தேசங்களைச்சுற்றிப் பார்த்து வந்து அங்கு கண்ட விசேஷங்களையும் விர்த்திகளையும்,ஸ்வதாவாகவுள்ள தங்கள் பூர்வக்கொள்கைகள் ஆசாரங்கள் அனுஷ்டானங்களிலிருந்தே யுண்டாகும்படி சுயபுத்தியாலமைத்துக் கொண்டதால் அவர்கள் தேசம் விர்த்திக்கு வந்ததேயன்றி அந்நியரைப் பார்த்துத் தாமும் ஆடுகளைப்போல் அவர்கள் பின்பற்றச் செய்த யத்தனத்தால் அவர்கள் இந்நிலைக்கு வந்தார்களில்லை. இந்த ருஷியா- ஜப்பான் யுத்தத்தில் ஜப்பானியர்களுடைய குணம் வெளிப்பட்டுவருவதில் அவர்கள் 'புஷிடோ' என்னும் நிஷ்காமகர்மக் கொள்கை மேவிட்டவர்களென்று தெரியவருகிறது. நிஷ்காமகர்மத்தால் மனோதீரமும் தேகதாட்டியமும் உண்டாகிவளர்வதன்றிசிந்தாசக்தியும்உண்டாகிசிரவணமனன சாமர்த்தியம்மிகுகிறது. 'சிரவண மனன சக்தியிருந்தாலன்றி புத்தி தீக்ஷண்யமும் சமயோசித சாமர்த்தியமாய் சந்தர்ப்பங்களுக்கேற்றபடி துணிந்து நடக்கயுத்தியும், சுறுசுறுப்பும் உண்டாகாது.நிஷ்காமகர்மத்தால் விசாரபுத்தியும், விசாரபுத்தியால் புத்திசூக்ஷ்மமும், புத்தி சூக்ஷ்மத்தால் வஸ்து விவேகமும், வஸ்து விவேகத்தால் எதற்குமஞ்சாத நெஞ்சும், நினைத்தது முடிக்குமாற்றலும் உண்டாகும். இவையெல்லாம் உலகெங்கும் எல்லாருக்கும் பொதுவாயும் ஸத்யமாயுமுள்ள தர்மங்கள். இந்த தர்மங்களை நமது தேசத்திலுதித்த ஞானசூரியர்களான அரிய ரிஷிகள் கண்டறிந்து கையாடினதுபோல் யாரும் கையாடினவர்களில்லை. அவர்கள் நமக்குப் பிதிரார்ச்சிதமாக வைத்துப் போன அந்த ஆத்மவித்தை நமக்குக் குறையாநிதியாகவும் சிந்தாமணிக் குவியலாகவுமிருக்க நாம் அதை அடைந்தனுபவிக்க யோக்கியதையின்றி சங்குமணி தேடி யலைகிறோம். நமக்குண்டான அற்பபுத்தியின் பயனாகவே இப்பொழுது நம்மவரிடத்தில் காணப்படும் அற்பத்தன்மையும் வந்திருக்கிறது. காரணம் நீங்கினாலன்றி காரியம் மாறாது. ஆகையால் நம் தேசம் முன்னுக்கு வரவேண்டுமென்கிற ஆசையுள்ளவர்களெல்லாரும் நிஷ்காமகர்மத்தைக் கடைப்பிடியாகப்பிடித்து விவேகவிற்பன்னராய் விஜ்ஞான சக்திமிகுந்து அவர்களது அற்பபுத்தி போய் நல்லபுத்தி வரும்படி உண்மையாக வுள்ளபடி பாடுபட்டுழைக்க வேண்டும். அதற்கு இப்பத்திரிகையை வெளியிட்டுவரத் தலைப்பட்டிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ டி. கே. பாலசுப்பிரமணியய்யரைப் போலொத்த கைப்பொருள் மிகுதியும் மெய்ப்பொருள் விருப்புமுள்ள புத்திமான்கள் வழிகாட்டிகளாகவிருந்து இத்தேசத்துக்குச் செய்யத்தக்க வுபகாரம் அளவிலதாகும். அந்நோக்கங்கொண்டே யிவரும் உழைத்துவருவாரென்று எண்ணுகிறோம்.